பதிவு எண் எம். 8798

**செம்மலர் ஏஜண்ட் தோழர்கள் உடனடி கவனத்திற்கு**

தோழர்களே!

ஆகஸ்ட், செப்டம்பர் பில் தொகையை அனுப்பி வைக்காத ஏஜண்ட்தோழர்களுக்கு அக்டோபர் இதழ் கண்டிப்பாக நிறுத்தப்படும்.

ஆகவே பாக்கித் தொகையை உடனடியாக 5—10—71 க்குள் அனுப்பி வைத்து அக்டோபர் இதழை உறுதிப்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

நிர்வாகி,
செம்மலர்.


# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்


**மதுரை மாவட்டத்தில் கட்சி**

## மாநாட்டு நிதி வசூல்!

மதுரை, செப் 29—

மதுரை மாவட்டத்தில் 9-வது அகில இந்திய கட்சிமாநாட்டு நிதி வசூலுக்காக நேற்று தீக்கதிர் இதழில் வெளியிடப்பட்டுள்ள ரூ. 20 ஆயிரம் கோட்டா உத்தமபாளையம், பெரியகுளம் ஆகிய இரு தாலுகாக்களுக்கு மட்டுமே என்று அறிவிக்கப் படுகிறது.

மற்ற தாலுகாக்களுக்கான கோட்டா, விரைவில் நிர்ணயித்து அறிவிக்கப்படும் என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) மதுரை மாவட்டக் குழுவின் செயலாளர்தோழர் ஏ. பி. பழனிச்சாமி அறிவிக்கிறார்.

கதிர் 9-ஏ ] மதுரை 30—9—71 வியாழக் கிழமை (வெளியூர் 1—10—71 வெள்ளிக் கிழமை) 4 பக்கங்கள் 13 காசுகள் [ மலர் 36

# இந்திரா காங்கிரஸ் ஆட்சியை எதிர்த்து தொடர்ந்து போராடுக!

## அ. இ. விவசாயிகள் மாநாட்டில் ஜோதிபாசு எச்சரிக்கை!

ரூர்காகலன், செப். 29—

**இந்திரா காங்கிரசை அரசியல் அதிகாரத்திலிருந்து தூக்கியெறிய மக்கள் கடுமையானப் போராட்டம் நடத்த வேண்டுமென்று தோழர் ஜோதிபாசு முழங்கினர். அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் 21-வது மாநாட்டையொட்டி நடந்த பொதுக்கூட்டமொன்றில் மேற்கண்டவாறு பேசியுள்ளார். ஏனெனில், இவர்கள்தான் இன்று சமுதாய முன்னேற்றத்திற்குப் பெரும் தடைக்கல்லாக உள்ளனர் என்றும் அவர் கூறினர்.**

அகில இந்திய விவசாயிகள் சங்கம் 21வது மாநாட்டின் இறுதி நாள் பேரணி, 26-ம் தேதி கொளுத்தும் வெய்யிலில் நடைபெற்றது. இந்தப் பேரணி 6 கிலோ மீட்டர் நீளம் கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலமாக இருந்தது. பல்லாயிரக்கணக்கான பெண்கள் தங்கள் கைக்குழந்தைகளையும் தூக்கிக் கொண்டு, வெய்யிலையும் பொருட்படுத்தாது, வீரமுழக்கமிட்டு வந்தனர். விவசாயிகள் சுமார் 120 டிராக்டர் வண்டிகளில் முழக்கமிட்டு வந்தனர். மேலும், 200 லாரிகளில் ஆண்களும் பெண்களுமாக முழக்கமிட்டு வந்தனர். ஊர்வல இறுதியில் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது பொதுக்கூட்டத்திற்கு வரவேற்புக் கமிட்டி தலைவர் தாலிப் சிங் தாப்பியாலா தலைமை தாங்கினர்.

தோழர்கள் ஏ. கே. கோபாலன். ஜோதிபாசு, ஹரி கிருஷ்ணகோனர் ஆகியோர் பேசினர்.

தோழர் ஜோதிபாசு பேசும் போது கூறியதாவது:—

ஆளும் காங்கிரசும், இதர கட்சிகளும் முற்போக்கு தத்துவங்கள் பற்றியெல்லாம் பேசி வருகிறார்கள். ஆனால் இவர்கள் எல்லோரும் மக்களுக்குத் துரோகம் செய்கிறார்கள். இவர்களை எல்லாம் அரசியலில் இருந்து தூக்கியெறிய வேண்டும். அப்போதுதான் மக்களுக்கான திட்டங்கள் நிறைவேறும்.

மத்தியிலும், மாநிலத்திலும் உள்ள இண்டிகேட் காங்கிரஸ் அரசாங்கங்களைத் தாக்கிப் பேசும் போது குறிப்பிட்டதாவது:

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டுதலில் செயல்பட்டுவரும் விவசாயிகள் சங்கம் மக்களுடைய உரிமைகளுக்காக மட்டும் போராடவில்லை. இந்த நாட்டில் ஒரு சமுதாய மாற்றத்தைக் கொண்டு வருவதற்காகவும் போராடி வருகிறது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சோசலிசத்திற்காகவே தன்னை அர்ப்பணித்துக்கொண்டுள்ளது. ஆனல் இந்த சோசலிசம், இந்திரா காங்கிரஸ் கூறுவது போன்ற சோசலிஸம் அல்ல. இந்திரா காங்கிரஸ் கூறி வருவது "சோசலிஸம்" என்ற கோஷம் மட்டுமே. முதலாளித்துவச் சுரண்டலை மூடி மறைக்க ஜனங்களை ஏமாற்றுவதற்காகக் கூறப்படுவதாகும்.



ஜோதிபாசு

பேங்கு தேசியமயம், இது போன்ற வேறு சில நடவடிக்கைகள் எல்லாம், விரல் விட்டு எண்ணக்கூடிய சில முதலாளிகளின் லாப நோக்கத்திற்காகவே.

"வறுமையை ஒழிப்போம்" என்ற இந்திராகாந்தியின் கோஷம் சாதாரண ஜனங்களைக் கவர்ந்தது ஆனல் மேற்கு வங்கத்திலும் கேரளாவிலும், திரிபுராவிலும் அது நடக்கவில்லை. ஜனங்கள் பெருவாரியாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியையே சட்டமன்றத்திற்கும்; நாடாளுமன்றத்திற்கும் தேர்ந்தெடுத்தனுப்பினர்.

ரயில்வே பட்ஜெட்டும் அதனுல் ரயில் கட்டண உயர்வும், 200 கோடி புதிய வரியும், இன்னும் 200 கோடிக்கு எந்த நேரத்திலும் போடவிருக்கும் புதியவரிகளும் ஜனங்களுடைய பிரமையை நீக்கியுள்ளன. ஏழை ஜனங்களும், சிறு சிறு முதனாளிகளும்கூட இந்த வரி விதிப்பினுல் பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

மேலும் அவர் குறிப்பிடும் போது:—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பங்கெடுத்த ஐக்கியமுன்னணி அரசாங்கத்தின் போது, நிலமில்லாத ஏழை விவசாயிகள் 3½லட்சம் எக்கர் நிலத்தை நிலப் பிரபுக்களிடமிருந்து எடுத்தார்கள். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி என்றுமே மக்களின்வாழ்க்கை மேம்பாட்டிற்காகப் போராடிவருகிறது ஆனல் ஆளும் காங்கிரஸ் ஜனவிரோத நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. தடுப்புக் காவல் சட்டத்தைப் பயன்படுத்தி மக்களின் உரிமைகளோடு விளையாடுகிறது அரசியல் கட்சிகளுக்கு எதிராக இந்தச் சட்டத்தைப் பயன்படுத்துகிறது.

இன்று மக்களுக்கான திட்டங்கள் நிறைவேற வேண்டுமானல், இந்திரா காங்கிரஸ் ஆட்சியைத் தூக்கியெறிய மக்கள் கடுமையான போராட்டம் நடத்த வேண்டுமென்று ஜோதிபாசு அறைகூவல் விடுத்தார்.

மேலும் அவர் மேற்கு வங்கத்தில்உடனடியாக ஜனதிபதி ஆட்சியை வாபஸ் வாங்க வேண்டுமென்றும், உடனடியாக—ஏற்கெனவே கூறியபடி பிப்ரவரி மாதத்தில் தேர்தல் நடத்த வேண்டுமென்றும் கூறினர்.

"இனியும் தேர்தல் நடத்தாமல் காலம் தாழ்த்தினுல், நாங் மத்திய அரசாங்கத்தை நிர்பந்திக்கும்பொருட்டுபோராட வேண்டியது வரும். கோரிக்கைகள் நிறைவேற வேறு நடவடிக்கைகளில் இறங்க நேரிடும்" என்றும் மத்திய அரசை எச்சரித்தார்.

மேற்கு வங்க மக்கள் மீது பயங்கர ஆட்சியைக் கட்டவிழ்த்து விட்டுள்ளதாகவும், படுகொலைகளுக்கு காரணமாக இருப்பதாகவும் மத்திய அரசை ஜோதிபாசு குற்றம் சாட்டினர்.

இவையெல்லாம் திட்டமிட்டு நடத்தப்பட்டு வருகின்றன. அடுத்த தேர்தல் தருவாயில் ஆளும் காங்கிரசுக்கு சாதகமான நிலையை உருவாக்கும் பொருட்டு இவை நடத்தப்படுகின்றன.

மேலும், 500-க்கும் மேற்பட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களையும, இதர ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு எதிரான அரசியல் கட்சி ஊழியர்களையும், போலீசாரும் நச்சல்பாரிஎன்ற சமூகவிரோதிகளும் படுகொலை செய்துள்ளனர். மத்திய அரசே இந்தப் படுகொலைகளுக்கெல்லாம் பொறுப்பு என்றும் அவர் குற்றம் சாட்டினர்.

**ஆபத்தான பயணம்!**



கேரளத்தில் இந்திரா காங்கிரசை மந்திரிசபைக்குள் கொண்டு வந்து நிலையான ஆட்சியை ஏற்படுத்தி விட்டதாக வலதுகம்யூனிஸ்டுகள் பூரிப்படைகின்றனர்.

## இரகசிய குறிப்பேட்டை ஒழிக்கவும்!

### முதலமைச்சரிடம் அரசு ஊழியர் பிரதிநிதிகள் முறையீடு!

சென்னை, செப். 29—

இரகசியக் குறிப்பு முறையை அறவே ஒழிக்கவேண்டும் என்றும் நிதி சம்பந்தமற்ற விஷயங்களில் அரசாங்கம் போதிய அவசர உணர்வுடன் நடந்து கொள்ள வேண்டும் என்றும் தமிழக முதலமைச்சர் கேட்டுக் கொள்ளப்பட்டார்.

தமிழக முதலமைச்சர் திரு. கருணாநிதியை செப். 27ல் அவரது வீட்டில் மாநில என். ஜி. ஓ. சங்கத் தலைவர் திரு. சிவ. இளங்கோ, அமைப்புச் செயலாளர் திரு. சுப. சீதாராமன் ஆகிய இருவரும் சந்தித்தனர். அரைமணி நேரம் முதல்வருடன் அவர்கள் பேச்சு வார்த்தை நடத்தினர்.

இரண்டாவது ஊதியக் குழுவில், இளநிலை உதவியாளர், ஆகியோரின் ஊதிய விகிதத்தை மாற்ற அரசு மறு பரிசீலனை செய்யவேண்டும் என்றும் அவர்கள் கூறினர். தற்போதைய மருத்துவச்செலவை திரும்ப அளிக்கும் முறையில் "முறைகேடுகள் மலிந்து" விட்டதால் இம்முறையை மாற்றி மாதந்தோறும் மருத்துவப்படி அளிக்க வேண்டும் என அவர்கள் கோரினர்.

ஊதியக் குழு பற்றிய ஊழியர்களின் கோரிக்கையின் நியாயத்தை தாம் புறக்கணிப்பதாக யாரும் கருதவேண்டாம் என்று முதலமைச்சர் கருணாநிதி உறுதி கூறினர். இளநிலை உதவியாளர்களின் எண்ணிக்கை மிகப் பெருந்தொகையினராக இருப்பதால் அவர்களது ஊதிய மறு பரிசீலனை விஷயத்தில் சிறிது அவகாசம் அளிக்கக் கேட்டுக் கொண்டார்,

## வாக்குறுதியை மீருதீர்! மூடிய மில்களை திறந்திடுக!

### சி. ஐ. டி. யூ. தமிழகக் குழு அறைகூவல்

நெல்லிக்குப்பம், செப்- 29 —

இந்திய தொழிற்சங்க மையத்தின் தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம் கடந்த 25, 26 தேதிகளில் இங்கு நடைபெற்ற போது கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

தமிழ் நாட்டில் பல பஞ்சாலைகள் தொடர்ந்து மூடப்பட்டுள்ளதை, இந்திய தொழிற்சங்க மையத்தின் தமிழ்மாநிலக் குழுக்கூட்டம் கண்டனம் தெரிவிக்கிறது.

கோவையில், தொழிற்சங்க தலைவர்களிடம் தமிழக முதல் அமைச்சர் கோவையில் மூடப்பட்டுள்ளவைகளில் 6 பஞ்சாலைகளை இரண்டு மாதங்களில், தமிழக அரசே எடுத்து நடத்தும் என்று அளித்த வாக்குறுதியை இக் கூட்டம் அரசின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறது. இரண்டு மாதங்கள் கடந்து விட்டன. ஆனல் மூடப்பட்ட எந்த ஒரு மில்லையும் அரசு மேற்கொள்ள வில்லை என்பது மட்டுமல்ல, மேற்கொண்டும் கோவையில் ஒருபஞ்சாலை மூடப்பட்டுள்ளது.

இவ்வாறு தமிழக அரசு, தான் கொடுத்த வாக்குறுதிகளையும் செய்துகொண்ட புனித ஒப்பந்தங்களையும் பொறுப்பற்ற முறையில் உதாசீனப்படுத்தும் போக்கை இக் கூட்டம் கண்டிக்கிறது. தமிழக அரசு உடனே தான் கொடுத்த வாக்குறுதிகளை அமுல் நடத்த வேண்டுமென இக் கூட்டம் கோருகிறது.

பஞ்சாலைகள் மூடப்படுவதற்கு முன்னல் பெற்று வந்த சம்பள விகிதங்களை குறைத்துக் கொள்ளாமலும் அனுபவித்து வந்த உரிமைகளில் கை வைக்காமலும் இருக்கக் கூடிய வகையில் மீண்டும் பஞ்சாலைகள் திறந்து நடத்த, போராடும் கோவை தொழிலாளர்கள் மீண்டும் ஒற்றுமையைக் கட்டி நேரடி நடவடிக்கைகளுக்குத் தயார் படுத்த வேண்டுமென இக் கூட்டம் அறை கூவல் விடுக்கிறது.

### 500 பேர் வேலைக்கு ஆபத்து

## அரசு ஊழியர் குமுறல்

மதுரை, செப். 29—

தமிழக அரசில் செட்டில்மென்ட் இலாகாவில் பல ஆண்டுகளாகப் பணிபுரிந்து வந்திருக்கும் ஊழியர்களின் வேலைக்கு ஆபத்து வந்துள்ளது. மாநில அரசு செப்டம்பர் 15-ம் தேதி பிறப்பித்திருக்கும் உத்திரவினுல் இந்த நிலைமை உருவாகியுள்ளது.

இதனுல் வேலை இழக்கப் போகிறவர்கள் எண்ணிக்கை 500-க்கும் மேலாகும். மதுரை நகரில் மட்டும் 50 பேர் வேலை இழக்கவிருக்கின்றனர்.

ஏழு ஆண்டுகள்வரை வேலை பார்த்தவர்கள் வாழ்க்கைக்கு வேறு வழியின்றி திண்டாடும் நிலை உருவாகியிருந்தும் மாற்று வேலைக்கு அரசு ஏற்பாடு செய்யவில்லை.

இந்த உத்திரவை நிறுத்தி வைக்கக்கோரியும் மாற்று வேலை தராமல் ஊழியர்களை வீட்டுக்கு அனுப்பக்கூடாது என்று வற்புறுத்தியும் மதுரை மாவட்ட என். ஜி. ஓ. சங்கம் மாநில அரசுக்குத் தந்தி அனுப்பியுள்ளது.

வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க திட்டம் தீட்டுவதாக வாய்ப்பறையடிக்கும் அரசு தன்னுடைய இலாகாவிலேயே நூற்றுக்கணக்கில் ஆட்குறைப்புச் செய்யத்தலைப் பட்டிருப்பது கண்டு அரசுஊழியர்கள் குமுறுகின்றனர். வேலை நீக்க உத்திரவைத் திரும்பப் பெறுவிட்டால் போராடவும் அவர்கள் உறுதி பூண்டுள்ளனர்.

**மாக்னசைட் தொழிலாளர்**

## போராட்டம் வெற்றி!

சேலம், செப்- 29

கடந்த ஒருமாத காலமாக நடைபெற்ற மாக்னசைட் தொழிலாளர் போராட்டம் வெற்றி பெற்றது.

1-வருட காலத்தில் காண்டிராக்ட் முறையை ஒழிக்கவும் காண்ட்ராக்ட் தொழிலாளர்களுக்கு வருகிற முதல் தேதியிலிருந்து ஊதியத்தில் 60 காசுகள் கூட்டிக் கொடுக்கவும் நிர்வாகம் இசைந்துள்ளது.

**தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முன்னேடி**

## அமரர் சீனிவாசராவ்



தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் கட்சியைத் துவக்கி வைத்த மூலவர்களில் தனிச் சிறப்பு வாய்ந்த தலைவரும்—தமிழகத்தில் முதன் முதலாக விவசாயிகள் இயக்கத்தை உருவாக்கி வளர்த்த முன்னேடியுமான நமது அருமைத் தலைவர் பி. சீனிவாசராவின் 10-வது ஆண்டு நினைவுதினம் 1971 செப்டம்பர் 30-ம் நாள்!

கம்யூனிச இயக்கமும் விவசாயிகள் இயக்கமும் தமிழகத்தின் அனைத்துமாவட்டங்களிலும், பட்டி தொட்டிகளிலெல்லாம் பற்றிப் படர்ந்திருக்கின்ற தென்றல், அதற்கு, தோழர் சீனிவாசராவின் தன்னலமற்ற - களைப்பு சலிப்பற்ற- இடைவிடாத, எளிய, உணர்ச்சியும் உத்வேகமுமிக்க உழைப்புதான் முதற் பெரும் காரணமாகும்!

குறிப்பாக, தமிழ் நாட்டிலேயே கொடிய நிலப் பிரபுத்துவக் கோட்டையான தஞ்சை மாவட்டத்திலே தாலுகா தோறும் புகுந்து, கிராமம் கிராமமாய் கால் நடையாகவே சென்று-தாழ்த்தப்பட்ட விவசாயத் தொழிலாளர்களையும், வாரம், குத்தகை விவசாயிகளையும் ஒன்றுதிரட்டி, செங்கொடி ஏற்றி, சங்கம் வைத்து வர்க்க உணர்வு ஊட்டி, போராட்டங்களை உருவாக்கி, தலைமைதாங்கி வழி நடத்திய மாபெரும் தலைவர் தோழர் சீனிவாசராவ்.

இறுதியாக, 1960-ம் ஆண்டில், காங்கிரஸ் சர்க்காரின் ஓட்டைகள் மிகுந்த நில உச்சவரம்புச் சட்டத்தை ஓட்டைகளற்ற, உழுபவர்களுக்கு நிலம் கிடைக்கத் தக்கவாறு ஒழுங்காகத் திருத்திட வேண்டுமென்ற கோரிக்கைக்காக, சென்னையை நோக்கி கோவையிலிருந்தும் மதுரையிலிருந்தும் புறப்பட்ட பாதயாத்திரைகளில், கோவை பாதயாத்திரைக்குத் தலைமை தாங்கி—தனது ஆஸ்த்மா நோயையும் பொருட்படுத்தாமல்300மைல்களுக்கு மேற்மட்ட தூரம் நடந்தும், வழிநெடுக பிரச்சாரம் செய்தும் வந்தார்.

அதையடுத்து 1961-ம் ஆண்டு செப்டம்பர் திங்களில் நடந்த விவசாயிகள் அறப்போரில் 16 000 பேர் சிறை சென்ற போது, வெளியிலிருந்து ஸ்தாபன தயாரிப்பு வேலைகளில் கடுமையாக ஈடுபட்டதின் விளைவாக 1961 செப்டம்பர் 30- ல் தஞ்சை நகரில் கட்சி அலுவலகத்தில் காலமானர்.

உழைக்கும் மக்களின் போர்க்களத்தில்இறுதி மூச்சு வரையும் உறுதியாக நின்று உயிர் நீத்த உத்தமத் தலைவர் உயர்பெரும் தேசபக்தர் தோழர் சீனிவாசராவின் திருநாமம் நீடூழி வாழ்க!

# தீக்கதிர்

## மாணவர் எழுச்சியும் முதலமைச்சர் தடையும்

ஆட்சியைப் பிடிப்பதற்கு மாணவர்களைத் திரட்ட தி. மு. க. தலைவர்கள் தயங்கவில்லை, ஆட்சி பீடம் ஏறியதுமே இது "மாணவர்கள் அரசு" என்று அவர்கள் பிரகடனம் செய்தனர்.

ஆட்சி பீடம் ஏறியபின்னர் முதலமைச்சர் திரு. கருணாநிதி இப்போது கோவையில் நடைபெற்ற திராவிட மாணவர் முன்னேற்ற கழக மாநாட்டில் கீழ்வருமாறு பேசியிருக்கிறார் :—

"தங்களின் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி சிறுகச் சிறுகச் சேர்த்த பொருளைக் கொண்டு—என்ன கனவு கண்டு உங்களைப் படிக்க வைக்கிறார்களோ அந்தப் பெற்றோரின் மனம் மகிழத்தக்க வகையில் படித்தேன்—பட்டம் பெற்றேன்—பண்பாளன் ஆனேன் என்ற விதத்தில் குடும்பத்தின் பெருமையை ஒளி விளக்காக ஏற்றி வைப்பேன் என்று கூறுவதுதான் உங்கள் பெற்றோர்களுக்கு மாணவர்களாகிய நீங்கள் செய்யும் கைமாறு" என்று கூறியுள்ளார்.

தமிழகத்திலும் இந்தியா முழுவதிலும் மாணவர்கள் இன்று போராடிக் கொண்டிருக்கின்றனர்.

இந்தப் போராட்டங்கள் வெடிப்பதற்கான காரணங்களை ஆராய முதலமைச்சர் தயாராக இல்லை.

தி. மு. க. பத்திரிகைகள் பல நாட்கள் விளம்பரம் செய்து தமிழகமெங்குமிருந்து மாணவர்களைத் திரட்டி நடத்தியிருக்கும் மாநாட்டில் முதலமைச்சர் பேசியிருக்கும் பேச்சுக்கள் என்ன தெரியுமா?

கோவில்களில் தமிழ் அர்ச்சனை பற்றியும் "திரு வேண்டும் ஸ்ரீ வேண்டாம்" என்று நடத்திய இயக்கம் பற்றியும் 'ஆகாஷ்வாணி வேண்டாம், பிராந்திய செய்தி வேண்டாம" என்பதற்காக நடத்தப்பட்ட இயக்கம் பற்றியும் மாணவர்கள் உடை அலங்காரம் பற்றியும் தமிழ்நாடு என்று பெயர் வைத்த சாதனை பற்றியும்தான் பேசியுள்ளார்.

படித்துப் பட்டம் பெற்று வந்ததும் மாணவர்களுடைய வாழ்க்கையை இருண்டதாக்கும் பிரச்னைகளைப் பற்றி முதலமைச்சர் தன் பேச்சு முழுவதிலும் எந்த இடத்திலும் வாயைத் திறக்கவில்லை.

வேலையில்லாத் திண்டாட்டத்தில் இந்திய மாநிலங்களில் தமிழகம் இரண்டாவது இடத்துக்கும் வந்திருக்கும் நிலைமையைப் பற்றி அவருடைய பேச்சு முழுவதிலும் ஒரு வார்த்தை கூட இல்லை.

"இன்றைக்கு நாம் கண்டு வருகின்ற வெற்றிகள் எங்கும தமிழ் எதிலும் தமிழ் என்கிற வகையில் நாம் கண்டு வருகின்ற வெற்றிகள் ஒவ்வொன்றுக்கு ஒரு சரித்திரம் இருக்கின்றது" என்று முதலமைச்சர் கூறினாரே யொழிய தமிழக அரசின் 'தமிழைப் போதனை மொழியாக்கும் திட்டத்துக்கு" ஆதரவு கோரக்கூட முடியாமல் போனதற்குக் காரணத்தை அவர் விளக்கவில்லை.

தமிழ் நாட்டில் வேலை கிடைக்காமல் திண்டாடும் போது தமிழைப் போதனை மொழியாகக்கொண்டு கல்வி கற்றிருந்தால் வெளி மாநிலங்களில் வேலை கிடைக்காது என்ற அச்சத்தினால் இந்தத் திட்டத்துக்கு ஒரு பகுதி மாணவர்களிடமிருந்து எதிர்ப்பு ஏற்பட்டதற்கான அச்சத்தைப் போக்க முதலமைச்சர் முன்வரவில்லை.

தமிழ்நாட்டில் இன்று எண்ணற்ற தொழிற்சாலைகள் வருடக்கணக்கில் மூடப்பட்டுக்கிடக்கின்றன. விலைவாசி ஏற்றத்தினாலும் மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். இந்த நிலைமைக்கும் மாணவர்களுக்கும் சம்பந்தமில்லை என்று அவர் கருதுகிறார். அதனால்தான் அவர் கீழ்வருமாறு கூறுகிறார்:—

"எத்தனையோ வீடுகள் உங்களை நம்பியிருக்கின்றன இங்கே என் மகன் ஸ்டாலின் சொன்னான் நாங்கள் நாலு பிள்ளைகள் இருக்கிறோம் ஒன்றை நாட்டுக்குத் தந்து விடுங்கள் என்றான். நான் நாலு பிள்ளைகளையும் தரத் தயாராக இருக்கிறேன். எனது குடும்பம் ஓரளவு வசதியான குடும்பம்—இன்றைக்கு...ஆனால் ஏழை எளிய குடும்பங்கள்—வானை நம்பியிருக்கின்ற குடும்பங்கள்—மழைவராதா!நம்மனம் மகிழாதா!என்று ஏங்கியிருக்கின்ற ஏழை வ்வசாயிகளுடைய குடும்பங்கள்—ஆலையில் வேலை செய்கின்ற குடும்பங்கள் போன்றவற்றிலே பிறந்திருக்கின்ற மாணவ மணிகளே! உங்களை எல்லாம் கேட்டுக் கொள்கிறேன் முதலில் வீட்டைக் காப்பாற்றுங்கள் பின்னர் நாட்டைக் காப்பாற்றுங்கள்...நாட்டைக்காக்க மொழியைக் காக்க நீங்கள் வந்தே தீரவேண்டுமென்றால் அதற்கு ஒரு காலகட்டம் உண்டு. அப்போது வாருங்கள்" என்று பேசயிருக்கிறார். —முரசொலி(29—9—71)

இவ்விதம் ஏழை மாணவர்களுக்கு அரசியல் கூடாது என்றும் பணக்கார மாணவர்கள் மட்டுமே அதில் ஈடுபடமுடியும் என்றும் அவர் போதித்துள்ளார்.

இன்றைய சமுதாயத்தின் சீர்கேடுகளைக் களைவதற்கான வழிவகைகளை கூற அவர் முன் வரவில்லை. இந்தச் சீர்கேடுகளைப போக்க முன்வந்தால் "நீ அழிந்து விடுவாய்" என்று மாணவர்களை எச்சரிப்பதே" முதலமைச்சர் பேச்சின் சாராம்சமாகும்.

நம் நாட்டின் வரலாற்றில் மட்டுமின்றி உலக நாடுகளின வரலாற்றிலெல்லாம தற்போது நடந்து கொண்டிருக்கும் பங்களாதேஷ் போராட்டத்திலும் மாணவர்கள் வகித்துள்ள பாத்திரம் பொன்னெழுத்துக்களில் பொறிககபபட்டுள்ளன.

ஒரு வேளை முழு சாப்பாடு கூடக் கிடைக்காமல் இலட்சக கணக்கான மக்கள் திண்டாடும் நம் நாட்டின் இன்றைய நிலைமையில் மாணவர்கள் அரசியலிலிருந்து ஒதுங்கி நிற்க முடியுமா?

இப்போது வராமல் அவர்கள் வரக்கூடிய "ஒரு கால கட்டம்" எப்போது வரும் என்று முதலமைச்சர் விளக்குவாரா? மாணவர்கள் அரசியலில பங்குபெற தகுதி பெறுவதற்கு இன்னமும் வாழ்க்கை சீரழிய வேண்டுமா?

மாணவர்கள் அரசியலில் ஈடுபடுவதற்கெதிராக முதலமைச்சர் ஏன் அச்சம் தெரிவிககவேண்டும்?

தன்னுடைய கட்சி நலனுக்காக "எங்கே கல்லூரி இருந்தாலும், கல்லூரிக்குள்ளே திராவிட மாணவர் முன்னேற்ற கழகம் ஒன்று அமைக்காமல் உயர்நிலைப் பள்ளிக்குள்ளே அமைக்காமல் ஊருக்கு ஊர், பெரிய ஊர்களில் எல்லாம் திராவிட மாணவர் முன்னேற்ற

(8-ஆம் பத்தி பார்க்க)

மாலா நிட்டிங் நிர்வாகத்தின்

## சட்டவிரோதப் போக்கை எதிர்த்து தொழிலாளர்களின் போராட்டம்

திருப்பூர், செப். 29 — திருப்பூரிலுள்ள மாலா நிட்டிங் நிர்வாகத்தின் சட்ட விரோதப் போக்கை எதிர்த்துப் போராடும் தொழிலாளர்களை, தி. மு. க. தலைவர்களின் செல்வாக்கைக்கொண்டு கைது செய்து பொய் கேஸ் போட்டதைக் கண்டித்து திருப்பூர் நகரத்திலுள்ள உழைப்பாளிகள் கொதித் தெழுந்தனர். 24—9—71 அன்று மாலை ஆயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் செங்கொடியுடன் ஊர்வலமாகச் சென்றனர். போலீஸ் அக்கரமத்தைக் கண்டித்தும், பொய் வழக்குப் போட்ட போலீஸ் அதிகாரிகளைக் கண்டித்தும், தொழில் தகராறில் முதலாளியிடம் லஞ்சத்தை வாங்கிக்கொண்டு அக்கிரமமாக செயல்படும் அதிகாரிகளைக் கண்டித்தும் முக்கிய வீதிகள் வழியாக ஊர்வலம் வந்தனர். மாலா நிட்டிங் கம்பெனி முன்னர் ஒன்று கூடினர். ஏராளமான தாய்மார்களும், பொதுமக்களும், மாணவர்களும் ஒன்றுதிரண்டிருந்த அக்கூட்டத்தில், தோழர் காளியப்பனும், தோழர் கருப்பசாமியும் பேசினார்கள்.

தோழர் காளியப்பன் பேசும்பொழுது மாலா நிட்டிங் முதலாளி செய்த தொழிலாளர் விரோத செயலை வன்மையாகக் கண்டித்தார். பின்னர் திருப்பூர் நகர மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு இயக்கச் செயலாளர் தோழர் கருப்பசாமி சொற்பொழிவு நிகழ்த்தினார்.

"மாலா நிட்டிங் முதலாளி எந்த ஒரு காரணமும் கூறாமல், தொழிலாளி ஒருவரை வேலை நீக்கம்செய்தது, அநீதியானது, சட்ட விரோதச்செயல். அந்த தொழிலாளியை வேலைக்கு மறுபடியும் எடுக்கும்படி கேட்டு கடந்த சிலநாட்களாக தொழிலாளர்கள் போராடி வருகின்றனர். மாலா நிட்டிங் கம்பெனிமுதலாளிஒருதி மு.க. காரர். இவர் தி மு. க. கட்சியின் பின்னணியில் போலீசு அதிகாரிகளை தன் கம்பெனிக்குள் அழைத்துவந்து கம்பனி மெஷினை ஓட்டச் செய்கிறார்கள். போலீஸ்காரர்களைக் கொண்டுவந்து மிரட்டுவது மட்டுமின்றி, மூன்று தொழிலாளர்களை கைதுசெய்து சிறையிலடைத்தனர். நாம் அவர்களை ஜாமீனில் மீண்டும் கொண்டு வந்துள்ளோம். தொழிலாளிகள் பலாத்காரத்தைப் பயன்படுத்தி சொத்துக்கு நாசம் விளைவித்தனர் என்று பொய் வழக்கு போட்டு போராடும் தொழிலாளர்களை அடக்கி ஒடுக்கப் பார்க்கின்றனர். முதலாளியின் வீட்டுக்குள் வந்து அவர் தரும் பிரியாணியையும், லஞ்சத்தையும் விழுங்கிவிட்டு போலீசுகாரர்கள் தொழில் தகராறில் தலையிட்டு முதலாளிக்கு பாதுகாப்பு தருகின்றனர். இங்கு மட்டுமல்ல, நம்தமிழ்நாட்டின் தொழிலாளர் நல அமைச்சர் என். வி. நடராசன் "தமிழ் நாட்டு முதலாளிகளைத் (நல்லவர்கள்) தங்க முதலாளிகள்", என்று பேசியுள்ளார். தமிழ் நாட்டிலுள்ள இந்த முதலாளிகள்தான் தொழிலாளர்கள்சம்பளத்தை வெட்டுகிறார்கள்; போனசு தராமல் ஏமாற்றுகிறார்கள். எஸ். ஆர். சி. மில் முதலாளி தி.மு க வைச் சேர்ந்தவர் அவர் மில்லில் தான் தொழிலாளியின் சம்பளத்தில் மாதா மாதம் ரூ. 30 பிடிக்கிறார்.

அவர் தி. மு. க. வின் கருத்தோட்டத்தில் "தங்க முதலாளி." இதே போன்றுதான தொழிலாளிகளின் பிராவிடன்ட் பண்டு பணத்தை ரூ 9 லட்சத்தை அரசுக்கு கட்டாமல் நாமம் போட்ட சோமசுந்தரம் (மில்) செட்டியாரை பாராட்டி பொன்னாடை போர்த்தினார்கள் தி. மு. க. அமைச்சர்கள்! அவரும் "தங்க முதலாளியாம்! இது தான் இன்று தி. மு. க. வின் தொழிலாளர் கொள்கை". என்று தோழர் கருப்பசாமி பேசினார்.

பொய்ப்புகார் மீது விவசாயத்

## தொழிலாளர்கள் கைது!

சிங்காநல்லூர், செப் 29— ஆற்றுப் புறம்போக்கு நிலத்தை ஒரு பெரிய நிலப்பிரபு ஆக்கிரமித்திருப்பதை விட்டுவிட்டு விவசாயத் தொழிலாளர்கள் மீது போலீஸ் பாய்ந்துள்ளது. இந்தத் தகராறில் விவசாயத் தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

150 ஏக்கர் நிலமுள்ள முத்துசாமிக் கவுண்டர் அரசாங்கப் புறம்போக்கு நிலத்தில் 3 ஏக்கர் வரை ஆக்கிரமித்து தென்னங் கன்றுகளை நட்டு பல மாதங்கள் ஆகியும் இவ்வூர் மணியக்காரர் நடவடிக்கை எடுக்கவில்லை.

மீதமுள்ள நிலத்தில் விவசாயத் தொழிலாளர்கள் பயிரிட விரும்பியதற்காக அவர்கள் கலகம் செய்ததாக பொய்யான முறையில் புகார் செய்யப்பட்டதின் பேரில் சுப்பன், அங்கமுத்து நஞ்சன், சின்னான், பழனி, பெரியசாமி, காமாட்சி ஆகியோர் செப். 21ம்தேதி கைது செய்யப் பட்டுள்ளனர். இவர்கள்மீது வழக்கும் தொடரப்பட்டுள்ளது.

இந்தப் பிரச்னையில் போலீஸ் தலையிட வேண்டிய அவசியமில்லை என்றும் ரெவின்யூ இலாகா அதிகாரிகள் தலையிட்டு நியாயம் வழங்கவேண்டும் என்று கோரியும் கலெக்டருக்கும் மற்ற அதிகாரிகளுக்கும் பொள்ளாச்சி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளையின் சார்பில் தோழர் கே. சி. கருணாகரன் மகஜர் அனுப்பியுள்ளார்.

### ஆந்திர துணை முதலமைச்சர்

ஹைதராபாத், செப். 28— புதிதாக அமைக்கப்படும் ஆந்திர அமைச்சரவையில் தற்போது சட்டமன்ற தலைவராக இருக்கும் பி. வி. சுப்பாரெட்டி துணை முதலமைச்சராக இருப்பார் என்று முதலமைச்சர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் பி. வி. நரசிம்மராவ் அறிவித்தார்.

## தாழையூத்தில் சைக்கிள் ஊர் வலம்

தாழையூத்து, செப். 29— 26—9—71-ல் தாழையூத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பிலும் பொதுத் தொழிலாளர் சங்கம் சார்பிலும் சைக்கிள் ஊர்வலம் நடந்தது. தோழர் என். அருணாசலம் தலைமையில், லெனின் திடலில் இருந்து புறப்பட்டது. விலைவாசியைக் கட்டுப்படுத்தக் கோரி முழக்கங்கள் எழுப்பிக்கொண்டு நகர் முழுவதும் வலம் வந்த பின்பு, சத்திரம் குடியிருப்பும் (நாரணம்மாள் பஞ்சாயத்து) வலம் வந்து லெனின் திடலை வந்து சேர்ந்தது.

அங்கு நடந்த கூட்டத்தில் பொதுத் தொழிலாளர் சங்கச் செயலாளர் (சி. ஐ டி யூ.) தோழர் எம். கே. வேலு பேசினார். அவர் பேசும் போது விலைவாசி உயர்வுக்கு மத்திய மாநில அரசுகளின் வரிக் கொள்கைகளே காரணம் என்றும், விலை உயர்வைக் கட்டுப் படுத்தக் கோரியும் நியாய விலைக்கடை திறக்கக் கோரியும் வற்புறுத்தினர்.

## தாராபுரத்தில் சி. ஐ. டி. யூ. வாரம்

தாராபுரம், செப், 29— தாராபுரம் வட்டாரத்தில் சி ஐ. டி. யூ முடிவையொட்டி கோரிக்கை வாரம் 14—9—71 முதல்19—4—71வரைநடந்தது. தாராபுரம் நகரத்திலும் கூட்டுறவு மில்லைச்சுற்றியுள்ள கிராமத்திலும் தினசரி காலையும்-மாலையும் தோழர்கள் கோஷ்டி கோஷ்டியாகப் பிரசாரம் செய்துவந்தார்கள்.

செப். 19-ம் தேதி மாலையில் ஊர்வலம் ஒன்று நகரத்தின் முக்கிய வீதி வழியாக வந்து இறுதியில் நகர பஸ்நிலையத்தில் ஊர்வலம் முடிவடைந்தது. அங்கு ஊர்வலத்தில் வந்த தோழர்களும் பொதுமக்களும் கலந்துகொண்ட கூட்டத்தில், சி. ஐ. டி. யூ. கோரிக்கைவாரம் செப் 12 முதல் செப். 19 முடிய 8 நாட்களும் தமிழகமெங்கும் ஒவ்வொரு நாளும் ஒரு கோரிக்கையை வலியுறுத்தியும் நடைபெற்றது பற்றி விளக்கியும் தோழர் டி.பி. முத்துச்சாமி பேசினார். (ந. நி.)

### பெரியகுளம்உத்தமபாளையம் வட்ட கட்சி மாநாடு

போடி, செப். 28— பெரியகுளம், உத்தமபாளையம் வட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் 7-வது மாநாடு அக்டோபர் 5, 6, தேதிகளில் போடியில் நடைபெறும். அதில் தோழர்கள் ஏ. பாலசுப்பிரமணியம், ஏ பி. பழனிச்சாமி, ஏ. அப்துல் வகாப் ஆகியோரும், கேரளத் தோழர்கள் ஜி. வரதன் எம். எல். ஏ, விக்கிரமன் ஆகியோரும் கலந்து கொள்கிறார்கள்.

### புதூர் வட்டார ஆசிரியர் கூட்டணி நிர்வாகிகள் தேர்வு

புதூர் (நெல்லை மாவட்டம்), செப், 28— தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியின் புதூர் வட்டாரக் கிளை அமைப்பு தேர்தல் 26-9-71 அன்று காலை 10 மணி அளவில் நாகலாபுரம்ஆல்பன்ஸ் உயர் தொடக்கப்பள்ளியில் நடைபெற்றது. ஆசிரியர் கூட்டணியின் நெல்லை மாவட்டத் தலைவர் திரு ஆ. முத்துச்சாமி மாவட்டச் செயலாளர் திரு. பி. முத்தையா முன்னிலையில் தேர்தல் நடைபெற்றது.

கீழ்க்காணும் நிர்வாகிகள் போட்டியின்றி ஏகமானதாகத் தேர்தெடுக்கப்பட்டனர்;—

திரு. லி. லிங்கசாமி (தலைவர்), திரு கா. சின்னத்தம்பி (துணைத் தலைவர்), திரு. தி, கணேசன் (செயலாளர்) திரு, வீ, வீராச்சாமி (துணைச் செயலாளர்) திரு கோ. நவநீத கிருஷ்ணன் (பொருளாளர்) மற்றும் திரு ஸ், இராமசாமி மு, பிச்சையா (வட்டார செயற்குழு உறுப்பினர்கள்) திருவாளர்கள் கி, பாப்பையன் எஸ், சீனிவாசகம், நா. சீனிவாசகன், பாண்டிமுனியாண்டி கொ, துரைராஜ் (மாவட்டப் பொதுக் குழு உறுப்பினர்கள்) தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பொதுக்கூட்டம்

திருச்சி செப். 29— ஜெயங்கொண்டம் நகரில் 8 உ. பொதுக்கூட்டமும் பாவலர் வரதராஜன் கச்சேரியும் நடைபெற்றது.

கூட்டத்திற்கு தோழர் எஸ். இராஜாக்கண்ணு தலைமை தாங்கினார். தோழர்கள் கோ. பாரதி மோகனும், ஆர். ஜெயராமனும் கலந்து கொண்டனர்.

## குறிப்புகள்

### மற்றும் ஒரு மோசடி

இந்திய அரசு 50 கோடி ரூபாய் செலவில் வேலையில்லாதோருக்கு வேலை அளிப்பதற்காக முன்பொரு திட்டத்தை, தேர்தல் முடிந்தவுடன் அந்த வேகத்தில் வெளியிட்டதும், அந்த அறிவிப்பு வந்தவுடன் தமிழ் மாநிலத்துக்கு அதிகமாக ஒதுக்கவேண்டும் என்று முதலமைச்சர் கருணாநிதி கேட்டதும் மக்கள், ஏதோ நடக்கப் போகிறது என்று எதிர்பார்த்ததும்—பின்பு மந்திரக் கூடைக்குள் மாமரத்தை வளர்த்து பழம் கொய்து தரும் ஜால வித்தைபோல்—எல்லாம் மாயமாய் மறைந்ததும்—இந்திரா அரசின் ஜகஜாலப் புரட்டுகளில் ஒன்றாக முடிவுற்றது.

வேலையின்மையைப் போக்க 50 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டதாகவோ அது பயன்படுத்தப்பட்டதாகவோ தகவலே இல்லை.

இது ஒருபுறமிருக்க, சமீபத்தில் திட்டக் கமிஷன் ரூ. 8 கோடி ஒதுக்கி இவ்வாண்டு 30 ஆயிரம் ஆரம்ப ஆசிரியருக்கு வேலை அளிக்கப் போவதாக அறிவித்துள்ளது.

இன்னும் பல திட்டங்களை அமுல் நடத்தப்போவதாகவும் ரோடு போன்ற வேலைகளுடன் எண்ணெய் வளத்துறை நீர்ப்பாசனத்துறை ஆகிய துறைகளில் பல வேலைவாய்ப்புகளுக்கு திட்டம் வகுத்துதிட்டக் கமிஷன் அரசாங்கத்திற்குத் தெரிவித்திருக்கிறதாகவும் செய்தி ஒன்று கூறுகிறது

இதன் பொருள் என்ன?

உண்மையிலேயே இந்த ஆலோசனைகள் அமுல் நடத்தப் பட்டால்கூட இன்றைக்குள்ள அரசு இலாகாக்களில் இன்னும் சிலருக்கு வேலை கிடைக்கலாம்; யானைப் பசிக்குச் சோளப்பொறி போட்டது போல.

படித்துப் பட்டம் வாங்கியவர்கள் வேலைகிடைக்காது, திண்டாடுபவர்கள் இன்று வேலை வேண்டி வேலைவாய்ப்பு அலுவலகங்களில் பதிவுசெய்து கொண்டிருப்பவர்களின் எண்ணிக்கை 47 லட்சம்.

இது அரசின் புள்ளி விவரம்!

கிராமப்புறங்களிலும், நகர்ப்புறங்களிலும் மொத்தம் வேலையில்லாதோரின் எண்ணிக்கையோ சுமார் 5 கோடி என்று கணக்கிடப்பட்டுள்ளது. (அதாவது நமது நாட்டு மக்கள் தொகையில் 11 பேரில் ஒரு நபருக்கு இன்று வேலை இல்லை.)

ஆனால்—

இந்த மாபெரும் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு, இந்திய நாடு முழுவதும் ஒரு சில ஆசிரியர்களுக்கும்; ஒரு சில பட்டதாரிகளுக்கும்— இன்றைய அரசு கொள்கைகளை மாற்றாமல், ஒட்டுப் பிளாஸ்திரி வேலை செய்து— சிலருக்கு வேலை கொடுத்து விடுவதின் மூலம் இந்தப் பிரச்னையைத் தீர்த்துவிடலாம் என்று நினைப்பது அல்லது பிரச்சாரம் செய்வது இந்த அரசு செய்துவரும் பல மாபெரும் மோசடிகளில் இதுவும் ஒன்று.

—கே. எம்.

## ஜனசக்தியின் சரடுக்கு மறுப்பு!

திருச்சி, செப். 29— திருச்சி "தீக்கதிர்" நிருபர் தோழர் வே. பரமேஸ்வரன் திருச்சியில் நடைபெற்ற வலது கம்யூனிஸ்ட் மாநாட்டை ஒட்டி நடைபெற்ற நிருபர்கள் கூட்டத்திற்குச் சென்றிருந்தும், அதுபோது அவரை அனுமதிக்காமல் திருப்பி விட்ட செய்தியையும் தீக்கதிரில் பிரசுரித்திருந்தோம்.

ஆனால் 19—9—71 தேதிய "ஜனசக்தி" யில் "தீக்கதிர்" நிருபர் வரவேயில்லை என்று "எரிமலைப்" பகுதியில் எழுதியுள்ளனர்,

அதற்குப் பதிலளித்து ஜனசக்திக்கு தோழர் வே. பரமேஸ்வரன் எழுதியுள்ள கடிதம் வருமாறு:—

'சென்ற19—9—71 ஜனசக்தியில் எரிமலை என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று வெளியாகியுள்ளது. கட்டுரையின் கடைசியில் தங்களின் திருச்சி மாநாட்டிற்கு தீக்கதிர் நாளிதழ் சார்பில் நான் பத்திரிகையாளர் நிருபர் கூட்டத்திற்கு வரவில்லை என்று 'ஜனசக்தி' மறுத்துள்ளது. நடந்தது இதுதான்.

11-ஆம் தேதி மாலை 7 மணிக்கு பத்திரிகையாளர் கூட்டம் என்று அறிந்துநானும் அங்கு சென்றிருந்தேன். என்னோடு "லாண்டு அண்டு லைப்" புகைப்பட நிருபரும், மற்ற இரு நண்பர்களும் வந்திருந்தனர். புகைப்பட நிருபர் தன்னுடைய அடையாளக் கார்டைக் காண்பித்து உள்ளே சென்றார். கேட்டில் இருந்தவர் நான் கொடுத்த நிருபர் கார்டை வாங்கிக்கொண்டு சற்று வெளியே காத்திருக்கும்படி கூறினார். உள்ளே கொண்டு செல்லப்பட்ட கார்டு எனக்கு அறிமுகமான விவேகாநந்தன் என்பவர் மூலமாக திரும்பிவந்தது. அவர் தற்சமயம் உள்ளே உங்களை அனுமதிக்க இயலாது நானே உங்களுக்குத் தகவல் தருகிறேன் என்று என்னுடைய இருப்பிட முகவரியையும் வாங்கிக் கொண்டார். நானும் திரும்பிவந்து விட்டேன், அப்போது உள்ளே கேட்டுக்கு அருகாமையிலேயே எல்லா பத்திரிகை நிருபர்களும் அமர்ந்திருந்தார்கள்,

நடந்த நிகழ்ச்சி அவ்வாறு இருக்க நிருபர் கூட்டத்திற்கு வரவேயில்லை என்பதை பொறுப்பான பிராட்வே அலுவலகத்தில் இருந்துகொண்டு கேவலமான 'பேட்டை" பாஷையில் மறுத்து மேலும் ஜனசக்தியின் தரத்தை "உயர்த்தி"யிருக்க வேண்டாம்."

### இராஜபாளையத்தில் ஊர்வலம்

இராஜபாளையம், செப். 29 இங்கு செப். 26-ல் தோழர் மாஸ்கோ எஸ். கந்தசாமி தலைமையில் ஊர்வலம் நடைபெற்றது. ரூ. 1—36-க்கு 1 படி அரிசி வழங்கும்படி முழக்கம் எழுப்பினர்.

ஆசிரியருக்கு வரையும் மடல்

## பல்கலைக் கழகமும் மாணவர்களும்

ஐயா,

இன்று பாட திட்டத்தின் தரத்தையும், மாணவர்களின் திறத்தையும் சோதித்து, சான்றிதழ் அளிக்கும் விதத்தையும் பார்த்தால், நாங்கள் படிக்கும் படிப்பிற்கு யாதொரு அர்த்தமும் இருப்பதாகத் தெரியவில்லை.

முதலாவதாக பாடத்திட்டத்தை எடுத்துக்கொண்டால், இங்கு படிக்கும் படிப்பிற்கும், அதன்பின வாழ்க்கையில் நாங்கள் நேரடியாகத் தொடர்பு கொள்வதற்கும் யாதொரு சம்பந்தமும் இருப்பதாகத் தெரியவில்லை. முற்றிலும் வாழ்க்கைக்குப் பொருந்தாத கல்வியையே படிக்க வேண்டியதிருக்கிறது. வேலை வாய்ப்புப் பற்றிக் கூறப் போனாலோ, பட்டப்படிப்பில் பௌதிகம், இரசாயனம் தாவரம் போன்ற விஞ்ஞானப் பாடங்களை விருப்பப் பாடமாக எடுத்தவனும்,பொருளாதாரம் படித்தவனும், இப்படி யாவருமே ஒருமுகமாகவே போட்டியிடுகிறார்கள். மேலும் இங்கு படித்துக்கொடுக்கும் படிப்பு உண்மையான உடல் உழைப்பு செய்பவனுக்கு மதிப்பளித்தலை கற்றுககொடுக்கவில்லை. உண்மையில் ஒரு தொழிலாளி இயந்திரத்தினின்று படிககும்படிப்பும், ஒரு விவசாயி நிலத்தை உழும் போது படிக்கும் படிப்பும், எவ்வகையிலும் நாங்கள் படிக்கும் ஏட்டுச் சுரக்காய்க்குக் குறைந்தது அல்ல.

மேலும் நமது தேர்வு முறையும் கேவலத்தனத்திலும் அதி கேவலத்தனமாக இருக்கிறது. மூன்றாண்டுகள் படித்த படிப்பை, மூன்றுமணி நேர காலத்திற்குள், எழுதுவதையே ஒரு மாணவனின் திறமை என மதிக்கிறார்கள். அம்மாணவன் குறிப்பிட்ட சில பாடங்களை மனனம் செய்து, அக்கேள்விகளும் தேர்வில் பிரசன்னமாகி விட்டால் அவன் வெற்றி பெற்றுவிடுகிறான். அதே வேளையில் யாவற்றையும் முறையே படித்து, கேள்விகளுக்கெல்லாம், சுயமாக தேர்வில் எழுதிய மாணவனே தேர்வது மிகக்கடினம், இவற்றைத் திருத்துவோரின் நிலையும் அனுதாபத்திற் குரியதாகவேயுள்ளது மேலும் பணத்தைக் கொடுத்து தேர்வில் வெற்றியடைவதையும் நரம் காணலாம்.

சில வேளைகளில் நன்முறையில் தேர்வு எழுதிய மாணவனின் மதிப்பெண், இவ்வாறு கையூட்டுக் கொடுக்கும் மாணவன் பெயரில் பதிப்பிக்கப்பட்டு விடுகிறதாம் தம் தேர்வு முடிவில் சந்தேகம் இருப்பதாகக் கோரி, தான் எழுதிய பேப்பர்களை இவர்களால் மீண்டும் திருத்தச் செய்யக் கூட முடியாதபடி சட்டங்கள் இருக்கின்றன.

இப்படிக்கு,
டி. ராமலிங்கம்.

∴ ∴ ∴

## ஆசிரியர் வேலையா? அறுவை சிகிச்சைக்கு ஆள்பிடிக்கும்வேலையா?

ஐயா,

"திருப்புவனம் ஒன்றியத்தில் 1—10—71 முதல் 15—10—71 முடிய குடும்பக் கட்டுப்பாடு தீவிர முகாம் நடைபெற இருக்கிறது. இம் முகாமில் தீவிர நடவடிக்கைகள் மேற்கொண்டு சிறந்த குறியீட்டினை அடைய பூர்த்தி செய்வது அனைவரதுகடமையாகும். எனவே இவ்வொன்றிய பள்ளி தலைமை ஆசிரியர்கள் அனைவரும் தலா 6 நபர்களை டி. விடி அல்லது வசக்டமி அறுவை சிகிச்சை செய்து கொள்ள அழைத்து வருமாறு அறிவிக்கப்படுகிறது. குடும்ப கட்டுப்பாட்டின் முக்கியத்தினை உணர்ந்த ஆசிரியப் பெருமக்கள் இம்முகாமிற்கு அவரவர்க்கான குறியீட்டை பூர்த்திசெய்ய ஒவ்வொரு தலைமை ஆசிரியரும் 5 நபர்கள் கண்டிப்பாய் அழைத்து வருமாறு அறிவிக்கப்படுகிறது.

(ஒன்றிய அலுவலக உத்தரவு நகல் சி3 6874/71 நாள் 17—9—71) மேலே கண்ட உத்தரவை ஆசிரியர்கள் கண்டிப்பான முறையில் செயலாக்கவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. ஆசிரியரின் வேலைதான் என்ன? மாணவர்கட்கு கல்வி அறிவூட்டுவதா? மாணவர்கட்கு மதிய உணவு சமைத்துப் போடுவதும், கொடிகள் (ஆசிரியர் தினக கொடி, ராணுவக்கொடி) விற்பதும், அறுவை சிகிச்சைக்கு ஆள் பிடிப்பதும்தான் ஆசிரியரின் வேலையா? மக்களே சிந்திப்பீர்!

இப்படிக்கு
வீ மா, ராமன்,
திருப்புவனம்.

(1-ஆம் பத்தித் தொடர்ச்சி)

கழகத்தை நீங்கள் உருவாக்க வேண்டும்" என்று அவர் வேண்டுகோள் விடுக்கத் தவறவில்லை.

—முரசொலி (29—9—71)

"கட்சிக் கருத்துக்களை அரசியல் ரீதியில் புகுத்தாதீர்" என்று அவர் உபதேசம் செய்வதெல்லாம் தி.மு. கழகத்துக்கு மட்டும் பொருந்தாது போலும்!

வேலை கோரியும் ஜனநாயக உரிமைகள் கோரியும் மாணவர்கள் கிளர்ந்தெழுந்தால் அதை தி.மு.க. அரசுக்கு எதிரான நடவடிக்கையாக முதலமைச்சர் பார்க்கிறார்.

நம் நாட்டில் ஆழமாகி வரும் பொருளாதார நெருக்கடி மாணவர்களின் எழுச்சியை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. இந்த எழுச்சியை முதலமைச்சர் தடுக்க முயற்சிப்பது கடலலைகளை மணல் சுவர் கட்டி தடுக்க முயற்சிப்பதற்கே ஒப்பானதாகும்.

★ படி அரிசி ரூ. 1-36க்கு வழங்குக! ★ நியாயவிலைக் கடைகள் திறந்திடுக!

# தமிழகமெங்கும் கண்டன ஆர்ப்பாட்டங்கள்!

## தஞ்சை மாவட்டத்தில் உண்ணுவிரதம்!★

தஞ்சை, செப். 29—

அரிசி மற்றும் அனைத்துப் பொருள்களின் விலைகள் மிகவும் உயர்ந்துவிட்டன. ஏழைத் தொழிலாளர்களும், விவசாயிகளும், நடுத்தர மக்களும் இதனுல் கொடிய துன்பத்தில் ஆழ்த்தப்பட்டுள்ளனர். திராவிட முன்னேற்றக் கழகமும், இண்டிகேட் காங்கிரசும் தேர்தல் காலத்திலே "விலைவாசியைக் குறைப்போம்; வேலையின்மையைப் போக்குவோம்; மக்கள் வாழ்வினை மலரச் செய்வோம் என்றெல்லாம் வாக்குறுதிகளை அள்ளி அள்ளி வீசினர். மக்கள் அவைகளை நம்பிபெருவாரியாக அக்கட்சிகளுக்கு வாக்களித்து, அவர்களை மீண்டும் ஆட்சியில் ஏற்றிவைத்தனர். விளைவு? விலைவாசி குறைந்ததா? வேலையின்மை குறைந்ததா? மாருக அரிசி இன்று லிட்டர் ரூ. 1-25க்கு விற்கப்படுகிறது! வேலையில்லாத் திண்டாட்டம் சற்றும் குறையவில்லை. இவர்களுடைய 'பசுமைப் புரட்சி'யில் உணவுப் பொருள்களின் விலை மேலும் மேலும் அதிகரித்து வருகிறது. இவர்களுடைய திட்டங்களால் வேலையின்மையும் மேலும் மேலும் அதிகரித்துத்தான் வருகிறது. 'அமைதிப் பூங்கா' என்கிருர்கள்—ஆனுல் மக்கள் வாழ்விலே அமைதி இல்லை! வெற்றி விழாக்கள் கொண்டாடி, மலர் மகுடங்கள் சூடிக் கொள்ளுகிருர்கள்—ஆனுல் வாக்களித்த மக்களின் வாழ்விலோ வறட்சி! உழைக்கக்கூடிய மக்களுக்கோ வேலையில்லை.

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த அரசோ எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

எனவே, தமிழகமெங்கும் 26-9-71 அன்று விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஊர்வலம், ஆர்ப்பாட்டம். கூட்டங்கள் நடத்தும்படி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி வேண்டுகோள் விடுத்தது.

### தஞ்சையில் உண்ணுவிரதம்

அதன்படி விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தக் கோரியும், அரிசி லிட்டர் 0—65 காசுகளுக்குக் கிடைக்கச் செய்யவும், நகரங்களில் வட்டத்திற்கு ஒன்றும், கிராமங்களில் ஊராட்சிக்கு ஒன்றுமாக நியாய விலைக்கடைகள் உடன் திறக்கும்படிக் கோரியும் தஞ்சை தாலுகா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் என். வெங்கடாசலம் தலைமையில் மற்றும் 14 தோழர்கள் செப். 27அன்று தஞ்சை மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்தின் முன்பாக உண்ணுவிரதம் இருந்தனர். உண்ணுவிரதம் தொடங்கும் முன்னர். உண்ணுவிரதம் இருந்த தோழர்களும் மற்ற கட்சித் தோழர்களும் தஞ்சை கீழவாசலில் இருந்து மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்திற்கு ஊர்வலமாக அணிவகுத்துச்சென்றனர். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக் குழு உறுப்பினர் தோழர் கோ. பாரதிமோகன் உண்ணுவிரதத்தைத் துவக்கி வைத்தார் விவசாயத் தொழிலாளர் சங்கப் பொதுச்செயலாளர் தோழர் கோ. வீரையன் தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் உண்ணுவிரதம் இருந்த தோழர்களுக்கு வாழ்த்துத்தெரிவித்தார். பகல் முழுதும் பெருந்திரளான மக்கள் உண்ணுவிரதம் இருந்த தோழர்களை வாழ்த்தியும், உண்ணுவிரதத்திற்கு தங்களது ஆதரவைத் தெரிவித்தும் சென்ருர்கள். உண்ணுவிரதம் காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை நடைபெற்றது.

### கோரிக்கை மனு:

காலை 10 மணி அளவில் தோழர் கோ. பாரதிமோகனும் தோழர் என். வெங்கடாசலமும் மாவட்ட ஆட்சியாளரிடம் தமிழக முதலமைச்சருக்கு அனுப்பப்படுவதற்காகக் கோரிக்கை மனு ஒன்றை அளித்தார்கள். இக்கோரிக்கை மனு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தஞ்சை மாவட்டக் கமிட்டியின் சார்பாக மாவட்ட ஆட்சியாளரிடம் அளிக்கப்பட்டது. இதில், மேற்கண்ட கோரிக்கைகள் வலியுறுத்தப்பட்டு உடனடி நடவடிக்கை கோரப்பட்டுள்ளது.

### கும்பகோணத்தில் உண்ணுவிரதம்

கும்பகோணத்தில் தோழர் ஜெய்சிங் ஸ்டாலின் தலைமையில் 56 தோழர்கள் அரிசி விலையைக் குறைக்கக்கோரி ஆர். ஓ. அலுவலகம் முன்பு ஒரு நாள் அடையாள உண்ணுவிரதமிருந்தனர்.

57 கிலோ கொண்ட ஒரு மூடை நெல்லை ரூ 27—60க்கு கொள்முதல் செய்துவிட்டு, நியாயவிலைக் கடைகளில்கூட லிட்டர் 85 பைசாவிற்கு விற்பது நியாயமற்றதாகும். எனவே நகர சபைகளில் ஒவ்வொரு வார்டிலும், கிராமங்களில் ஒவ்வொரு பஞ்சாயத்திலும் நியாய விலைக்கடைகள் திறக்கவேண்டும்! அரிசிலிட்டர் 65காசுக்கு கொடுக்கவேண்டும் என்பது கோரிக்கையாகும்.

### மன்னார்குடியில் 104 பேர் உண்ணுவிரதம்

மன்னார்குடி, செப். 29—

27—9—71-ல் மன்னார்குடி ஆர். டி. ஓ ஆபீஸ் முன்பு காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை தோழர் டி. தொபியாஸ் (மேலாளவந்தசேரி ஊராட்சித் தலைவர்) அவர்கள் தலைமையில் ஆண்கள் 94 பேர்களும், பெண்கள் 10 பேர்களும் ஆக 104 தோழர்கள் ஒரு நாள் அடையாள உண்ணுவிரதம் இருந்தார்கள். உண்ணுவிரதத்தை தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் துவக்கி வைத்தார்.

ஒரு லிட்டர் அரிசி 0.65-க்கு கொடுக்கக் கோரியும் நகரத்தில் வார்டுக்கு ஒரு நியாய விலைக்கடை திறக்கக் கோரியும், கிராமத்தில் பஞ்சாயத்துக்கு ஒரு நியாய விலைக்கடை திறக்கக் கோரியும் ஆர். டி. ஓ. ஆபீஸ் முன்பு உண்ணுவிரதம் இருந்தார்கள்.

ஆண்கள் 94 பேர்கள், பெண்கள் 10 பேர்கள் கலந்து கொண்டார்கள். அவர்களில் வீரமுத்து—லெட்சுமி, வேலாயுதம்—செல்வமணி கோவிந்தராசு—பத்மினி; பெரியசாமி—அன்னப்பொட்டு ஆகிய தம்பதிகளும், வடவேற்குடி தோழர் கே. பெரியசாமி மகள் 7 வயது விஜயா என்ற சிறுமியும் உண்ணுவிரதத்தில் வெற்றிகரமாக கடைசிவரையிலும் இருந்தார்கள். கோரிக்கையின் விபரத்தை ஆர். டி. ஓ. அவர்களிடம் மகஜர் கொடுக்கப்பட்டது. உண்ணு விரதம் முடிந்து ஊர்வலமாக வெண்ணெய்த்தாழி மண்டபம் அடைந்துதோழர் டி. தொபியாஸ் அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் ஏ. நடராஜன் கலந்து கொண்டு பேசினர்கள்.

### பட்டுக்கோட்டையில் உண்ணுவிரதம்!

பட்டுக்கோட்டை, செப். 28—

அரிசி விலையை குறைத்து லிட்டர் 65 காசுக்கு கொடுக்கும் படியும். நகரங்களில் வார்டுக்கு ஒரு நியாய விலைக்கடையையும், கிராமங்கள்தோறும் ஒரு நியாயவிலைக்கடையையும் திறக்கக் கோரியும் பட்டுக்கோட்டை ஆர். டி. ஓ அலுவலகம் முன் தோழர் சி.பார்த்திபன் தலைமையில் 31 மார்க்ஸிஸ்ட் தோழர்கள் காலை 6 மணி முதல் மாலை 6மணிவரை உண்ணுவிரதம் இருந்தனர். மாலை 5 மணிக்கு ஆர் டி ஓ தன்னை வந்து சந்திக்கும்படி தோழர் பார்த்திபனை தாசில்தார் மூலம் கட்டாயப்படுத்தியும் தோழர் மாலை 6 மணிக்குள் சந்திக்க மறுத்தார். பின் மாலை 6 மணிக்கு பின் ஆர். டி ஓ சம்மதித்தன்பேரில் தோழர் பார்த்திபன் கோரிக்கைகளை விளக்கி கூறிய பின் ஆர் டி ஓ நியாயவிலை கடையை திறக்க ஒத்துக்கொண்டார். நியாய விலைக்கடை திறந்தால் பிரச்சினை தீராது. அதில் 65 காசுக்கு, லிட்டர் அரிசி தர வேண்டும் என்று கோரியபின், ஆர் டி ஓ இது அவசியமானது, என்ன செய்வது அரசு அல்லவா கண்டிப்பாக இருக்கிறது ஆகையால் நான் அரசுக்கு உங்கள் பிரச்சினையை தெரியப் படுத்துகிறேன் என்ற பின் தனது பேச்சு வார்த்தையை முடித்துக்கொண்டு பின் ஊர்வலமாகஅஞ்சல்நிலைய பொதுக் கூட்ட மேடைக்கு கோஷத்துடன் சென்ருர்கள் தோழர்கள்.

பொதுக்கூட்டம் தோழர் கே. ஆர். அய்யம்பெருமாள் தலைமையில் ஆரம்பமானது. அதில் உண்ணுவிரதத்தை விளக்கி தோழர்கள்நல்லதம்பி, அய்யனுர், ராமச்சந்திரன்பேசினுர்கள். கடைசியில் பேசிய தோழர்பார்த்திபன் இன்றைய நிலைமையில் அரிசி உயர்வை எதிர்த்து போராட்டம் நடத்த மற்றகட்சிகள்முன்வராததைப் பற்றியும், தி மு. க. அரசின் கொள்கையில்லா தன்மைப் பற்றியும் முதலமைச்சர் கருணுநிதி, ஓயாமல் "நச்சலைபாரி அபாயம்" என்றுபேசிக்கொண்டிருப்பதன் மூலம் தமிழ்நாட்டு மக்களை வாட்டும் பிரச்னைகளிலிருந்து அவர்களுடைய கவனத்தைத் திசை திருப்பிவிட முடியாது. அத்துடன் காவேரி நதிப்பிரச்சனையில் தி. மு. க. வின் போல் அரசியலை அம்பலப்படுதிப் பேசிய பின் கூட்டம் முடிவு பெற்றது.

### போடியில் ஆர்ப்பாட்டம்

போடி, செப். 29—

இங்கு 26-9-71 மாலை 6 மணிக்கு விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஜீவா நகர் கட்சி அலுவலகத்திலிருந்து புறப்பட்டது.

பாதுகாப்புச் சட்டத்தை ரத்து செய்! படி அரிசி ரூ 1 36க்கு வேண்டும்! நியாய விலைக்கடைகள் திறக்க வேண்டும்!" போன்ற முழக்கங்கள் எழுப்பப்பட்டது.

இந்த ஆர்ப்பாட்டத்தில் சில்லமரத்துப்பட்டி, சிலமலை, லட்சுமி நாயக்கன்பட்டி, உப்புக் கோட்டை, சுந்தரராஜபுரம், மீனுட்சிபுரம், அணைக்கரைப்பட்டி ஆகிய கிராமங்களில் இருந்து தோழர்கள் வந்துகலந்து கொண்டனர்.

நான்கு ராந்தலில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் ப. ராமர், எம். சிவனு ஆகியோர் பேசினர்.



1970, மே, 3-ம் நாளன்று கூலிஉயர்வு கோரிபோராடிய நெய்வேலி தொழிலாளர் மீது, தி. மு. க. அரசு போலீஸ் துப்பாக்கிச் சூடு நரவேட்டையில் இன்னுயிர்நீத்தஇளந் தொழிலாளி தியாகி தேவன்பு!

### உத்தமபாளையத்தில் கண்டன பொதுக்கூட்டம்

இங்கு, செப். 26ந் தேதி மாலை 7 மணியளவில் மார்க்ஸ்-ஏங்கெல்ஸ் மன்றத்திடலில் விலைவாசிஉயர்வு கண்டன பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் பி. எஸ். சத்பிரசாதம் தலைமை வகித்தார்.

தோழர்கள் எஸ். கே. சுப்ரமணியம்(மாவட்ட தோட்டத் தொழிலாளர் சங்கச் செயலாளர்) பி. உசேன் மீர்(தலைவர்) வி. சொக்கலிங்கம் (தாலுகா விவசாய சங்க செயலாளர்) ஆகியோர் பேசினர்.

நியூ ஆம்பாடி நிர்வாகத்தின் போக்கைக் கண்டித்தும், உடனடியாக சர்க்கார் தலையிடக் கோரியும் வற்புறுத்திப் பேசினர். உடனே நியாய விலைக் கடைகளைத் திறந்து 1 படி அரிசி ரூ 1-36க்கும் வழங்கும் படியும் வற்புறுத்தினர்.

### பெரியகுளத்தில் ஆர்ப்பாட்ட ஊர்வலம்

இங்கு, செப் 26ல மாலை 4 மணியளவில் விலைவாசி உயர்வைக் குறைக்கக் கோரி ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது. விலைவாசியைக் கட்டுப்படுத்தக் கோரியும், படியரிசி ரூ 1-36க்கு வழங்கும் படியும், வட்டங்கள் தோறும் நியாய விலைக்கடைகள் திறக்கும்படியும் முழக்கங்கள் எழுப்பப் பட்டன.

ஊர்வல முடிவில் நடைபெற்றகூட்டத்தில் தோழர்கள் டி. ஆர். சுப்பிரமணியம், எஸ். பி. சிக்கந்தர், பி. கே. முத்துச்சாமி, பி. அப்துல் ரகுமான், எஸ். ஏ ரஜாக் ஆகியோர் பேசினர்.

### கம்பத்தில்ஆர்ப்பாட்டம்

இங்கு செப் 26-ந் தேதி மாலை 5 மணிக்கு ஆர்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது.

விலைவாசிகள் உயர்வுக்குக் காரணம் பற்றியும், விலைவாசியைக் குறைக்குப்படியும், நியாயவிலைக் கடைகள் திறக்கும்படியும் நகரின் பல்வேறு இடங்களில் தோழர்கள் வீரபத்திரன், கே. நாச்சிவேலு, எம். எம். அனிபா, என். எஸ். நைனுர், ஏ. மஜீத்கான் ஆகியோர் மெகோபோன் மூலம் பிரச்சாரம் செய்தனர். உண்டியல் மூலம் ரூ. 21-50 வசூலானது.

### எரியோட்டில் பிரச்சார சைக்கிள் யாத்திரை

எரியோடு, செப். 28

மத்திய, மாநிவ அரசுகளின் வரிக்கொள்கையைக் கண்டித்தும், விலைவாசியைக்குறைக்கக் கோரியும், கிராமம் தோறும் நியாயவிலைக்கடைகள் திறக்கக் கோரியும் எரியோட்டிலிருந்து 24—9—71காலை9-30மணிக்கு சைக்கிள் யாத்திரை புறப்பட்டது. இதற்கு தோழர் நா. முனியப்பன் தலைமை தாங்கினுர்.

பண்ணைப்பட்டி மணியக்காரன் பட்டி, மத்தனம்பட்டி, ம. புதூர், மறவபட்டி, குண்டரம்பட்டி, குடும்பப்பட்டி. சின்னகுட்டிபட்டி, எர்ணசமுத்திரம், குருக்கலையம்பட்டி ஆகிய ஊர்களுக்குச் சென்று பிரச்சாரம் செய்தனர்.

இங்கு செப். 26-ல் காலை 9 மணிக்கு விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது தோழர் ஐ எம். பி. கண்ணன் தாயுமான் தலைமை தாங்கினர்.

ஊர்வல முடிவில் நடந்த கூடத்தில்-தோழர் எம். ஆண்டிவேலன் பேசினுர்.

### மேலூரில் விலைவாசி உயர்வை எதிர்த்து ஆர்ப்பாட்டம்!

மேலூர், செப். 27—

மேலூரில் விலைவாசி உயர்வை கண்டித்து செப் 27 திங்கட்கிழமையன்று கண்டன ஊர்வலம், பொதுக்கூட்டம் நடைபெற்றன.

தோழர் கே. குமார் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர்கள் நன்மாறன், பக்தவத்சலம், ராமசாமி, வி.குருசாமி, ஆகியோர் விலைவாசி உயர்வைக் கண்டித்துப் பேசினுர்கள்.

கிராமங்கள்தோறும் நியாய விலைக் கடைகள் திறக்க வேண்டும்.

படி அரிசி ரூ. 1-36க்கு விநியோகம் செய்ய வேண்டும்.

மத்திய, மாநில வரிக் கொள்கையைக் கண்டித்தும், தடுப்புக்காவல் சட்டத்தை ரத்துசெய்யக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### திண்டுக்கல்லில் ஊர்வலம், பொதுக்கூட்டம்

திண்டுக்கல் நகரில் செப் 26 ஞாயிறு மாலை 5—30 மணியளவில் மார்க்கெட் தெரு செங்கொடி மைதானத்திலிருந்து விலைவாசி உயர்வுக்கு எதிர்ப்புத்தெரிவித்து முழக்கம் எழுப்பிக்கொண்டு நகர முக்கியவீதிகள் வழியாகஊர்வலம் வந்து நாகல் நகர் சந்தை ரோட்டில் பொதுக்கூட்டம் நடைபெற்றது தோழர் ஏ. முனுசாமி தலைமையில் இ எஸ் சுந்தரம், மின்சார ஊழியர்சங்கம். வி எஸ். எம். மரைக்காயர் ஹோட்டல் தொ. சங்கம். எம். ராமசாமி பொது தொ. கம் ஆகியோர் இன்றைக்கிருக்கின்ற விலைவாசிகள் வாங்க முடியாத அளவுக்கு உயர்ந்துள்ளன. மத்திய, மாநில அரசுகள் கோடானகோடிக்குமேலும் புதியவரிகளை மக்கள் மீது திணித்துஇருப்பதையும், வேலையில்லாத் திண்டாட்டத்தை பெருக்கிவருவதையும் இடித்துக்காட்டி கண்டனக்குரலை எழுப்பினுர்கள்.

ஊர்வலம், பொதுக்கூட்டத்தில் தோல் பதனிடும் தொழிலாளர்களும், சி. ஐ. டி யூ. தொழிலாளர்களும், கட்சி உறுப்பினர்களும் திரளாக வந்து கலந்துகொண்டனர்.

விலைவாசி உயர்வை கட்டுப்படுத்தவும், வரி உயர்வை ரத்துசெய்யவும், தடுப்புக்காவல் சட்டத்தை ரத்துசெய்யவும், மின், பஸ், ரயில்வே கட்டணத்தை ரத்து செய்யக் கோரியும் பலத்த கரகோஷத்திற்கிடையே தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### சின்னுளபட்டியில் பிரச்சார ஊர்வலம்

சின்னுளப் பட்டியில் மாலை5 மணியளவில் ச கதிர்வேல் தலைமையில் முற்போக்குவாசகசாலையிலிருந்து முக்கிய வீதிகள் வழியாக "விலைவாசி உயர்வைக் கட்டுப் படுத்து. விசைத்தறியைப் புகுத்தாதே, மலிவு விலையில் அரிசி கொடு! நியாயவிலைக் கடைகளைத்திற" போன்ற பல கோஷங்களை முழங்கிக்கொண்டு நகர கட்சி அலுவலகம் வந்தடைந்தது.

ஏராளமான கைத்தறி நெசவுத் தொழிலாளர்களும், கட்சி ஊழியர்களும் கலந்து கொண்டார்கள்.

# சிறு தொழில்களும் உரிமைப் போராட்டங்களும்

## மதுரை ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் மாநாட்டு நிகழ்ச்சிகள்!

மதுரை, செப். 28—

மதுரை ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் 17-வது ஆண்டுவிழா 26—9—71 ம் தேதியில் நடைபெற்றது. நகரின் பல்வேறு தொழிற்சாலைகளில் இருந்து தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்.

தோழர் கே. வாசுதேவன் தலைமை தாங்கினுர். வி. எஸ். மணி சங்கக் கொடியை ஏற்றிவைத்தார். சி. ஐ. டி. யூ. சங்கங்களைச் சேர்ந்த பி. எம். குமார், எஸ் ஜார்ஜ், பி. சுந்தரராஜ், ராமசாமி ஆகியோர் இன்று நடைபெற்றுவரும் போராட்டங்களைப்பற்றி பேசினுர்கள்.

சங்கச் செயலாளர் ஆர். சாமுவேல் கடந்த ஆண்டில் நடந்த வேலைகளையும், சங்க சாதனைகளையும்கொண்ட அறிக்கையை சமர்ப்பித்து எதிர்கால நடவடிக்கையையும் பற்றி பேசினுர்.

### சிறு தொழில்கள் நசிவது ஏன்?

தீக்கதிர் ஆசிரியர் தோழர் கே. முத்தையா பேசுகையில் இந்நாட்டின் பொருளாதாரத்தில் பெரு முதலாளிகளின் மரணப்பிடி போல் ஆதிக்கம் இருப்பதால் சிறு தொழில்கள் எவ்வாறு பாதிக்கப்பட்டு சீரழிகின்றன என்பதை எடுத்துக்கூறினுர். இந்த சிறு தொழில்களை நடத்துவோர் தமது நெருக்கடியைத் தொழிலாளிகள் மீது சுமத்தி தமது லாபத்தைப் பாதுகாத்துக் கொள்ள முயற்சிக்கிருர்களென்றும், இதனுல் சிறு தொழில்களில் உள்ள தொழிலாளர்கள் கடுமையாக சுரண்டப்படுகிருர்களென்றும் பெரும்பாலும் பட்டினிச் சம்பளந்தான் இவர்களுக்குக் கிடைக்கிறதென்றும் விளக்கினுர்.

இரும்பு விலையை உயர்த்தினுல் சகல சிறுதொழில்களும் பாதிக்கப்படுகின்றன. நூல் விலையை உயர்த்தினுல், சகல கைத்தறிகளும் நிட்டிங் கம்பெனிகளும் பாதிக்கப்படுகின்றன.

எனவே கோரிக்கைகளுக்காக சிறு தொழில்களில் உள்ளதொழிலாளர்கள் உறுதியாகப் போராடுகிற அதே சமயத்தில் இந்தச்சிறுதொழில்களின் உரிமையாளர்களுக்கும் ஏகபோக முதலாளிகளுக்குமிடையே உள்ள முரண்பாட்டையும் உணர்ந்து, இன்று நாட்டின்அரசியலிலும், பொருளாதாரத்திலும் நாசகரமான ஆதிக்கம் புரியும் இந்த ஏகபோக முதலாளிகளுக் கெதிராக இந்த சிறு தொழில் உரிமையாளர்களையும் திரட்ட வேண்டுமென்பதையும்மனதில் கொண்டுஇயக்கம்நடக்கவேண்டுமென்று குறிப்பிட்டார்.

### புதிய நிர்வாகிகள்

சங்க நிர்வாகஸ்தர்களாக தோழர்கள் கே. வாசுதேவன் தலைவராகவும், எஸ். கணபதி ஆர். கிருஷ்ணமூர்த்தி, கே,பி, ஆறுமுகம் ஆகியோர் உப தலைவர்களாகவும் ஆர். சாமுவேல் செயலாளராகவும், எம். ராஜாங்கம், பி சண்முகசுந்தரம், எஸ். பாலசுப்பிரமணியம் துணைச் செயலாளராகவும், டி. எஸ். சுந்தரராஜன் பொருளாளராகவும், ந. சுகுமாரன் ஆர். வெங்கடசாமி, ந நாகராஜன், ஆர் கோபால், மூத்துக்கருப்பன், பி உடையார், பி. பொன்னுசாமி என். திருஞானம், மணி, பி. சுந்தரரராசு, எஸ். வைத்தியநாதன் பி ஆர். வித்யாமூர்ணுச்சாரி, ஆகியோர் நிர்வாகக்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

### தீர்மானங்கள்

மாநாட்டில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

தடுப்புக்காவல் சட்டத்தை வாபஸ் வாங்கக்கோரியும், மேற்கு வங்கத்தில் அரசியல் படுகொலைகளை நிறுத்தக் கோரியும், எல்லைப்பாதுகாப்புப்படை, ராணுவம் மத்திய ரிசர்வ் போலீஸ் ஆகியவற்றை வாபஸ் வாங்கக் கோரியும் தேர்தலை நடத்தக் கோரியும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழகத்தில் உள்ள எல்லா ஸ்தாபனங்களிலும் பணி புரிந்துவரும் தொழிலாளர்களுக்கு கிரஜுட்டி சட்டம் இயற்றவேண்டுமாய், மத்திய. மாநில அரசினரை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

பிரஸ், ஹோட்டல், ரைஸ் மில் ஆகிய சிறு தொழில்களில் பணிபுரிந்து வரும் தொழிலாளர்களுக்கு தற்போதுகுறைந்த சம்பளம் வழங்கப்படுகிறது அதைக்கொண்டு விஷம் போல் உயர்ந்து வரும் விலைவாசி உயர்வை ஈடுகட்ட முடியாமல் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

ஆகவே மேற்கண்டதொழில்களில் பணி புரிந்து வரும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச சம்பளக்குழு நியமித்து உடனடியாக அறிவிக்க வேண்டும் என இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

மதுரை நகரில் சட்ட அனுகூலங்களை சரியாக வழங்காமல் முதலாளிகள் ஏமாற்றி வருகின்றனர். இதனுல் தொழிலாளிகள் 16 மணி நேரம் வரை வேலை வாங்கப்பட்டு வருகின்றனர்.

சட்ட வசதிகள் கிடைக்க மாநில அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும் என இம் மாநாடு கேட்டுக்கொள்கிறது.

## மாஸ்கோவில் இந்திய கால்பந்து வீரர்கள்!

மாஸ்கோ, செப். 25—

"சோவியத் விளையாட்டுத் துறையைப் பற்றியும், சோவியத் விளையாட்டு வீரர்களின் ஆற்றலைப் பற்றியும், நாங்கள் நன்கு அறிவோம். சோவியத் மக்களிடம் நற்பெயர் வாங்க நாங்கள் அனைவரும் இடையருது முயல்வோம்" என்று இந்திய கால்பந்து வீரர்களின் தூதுக்குழுத் தலைவர் பேராசிரியர் தாண்டன் அண்மையில், மாஸ்கோவில் ஒரு வரவேற்பின்போது கூறினுர். இந்திய கால்பந்து வீரர்களும் சோவியத் கால்பந்து வீரர்களும் மாஸ்கோ டைனமோ ஸ்டேடியத்தில் முதன் முதலாகத் தமது விளையாட்டைத் தொடங்குமுன்னர், திரு. தாண்டன் இவ்வாறு கூறினுர்.

இந்திய கால்பந்து வீரர்கள் நன்கு விளையாடினுர்கள். அவர்களது சிறந்த ஆட்டத்தை மாஸ்கோ மக்கள் ரசித்துப் பாராட்டினர். சோவியத் யூனியன் 5 — 0 என்ற ரீதியில் வெற்றி பெற்ற போதிலும், இறுதிவரை ஆட்டம் விறுவிறுப்பாக இருந்தது. கோல்கீப்பர் கனுய் சர்க்கார் மிகச் சிறப்பாக விளையாடினுர். இந்தியக் குழுவின் தலைவர் அஜய் கோஷும், 'பார்வர்டு' முகம்மது அலியும் சோவியத் வீரர்களைத் திணற அடித்தனர்.

### இந்தியாவின் தரம் உயர்ந்துள்ளது

இந்த ஆட்டத்தைக் கவனித்த திரளான ரசிகர்களில் செர்கி சல்னிகோவ் என்ற புகழ்பெற்ற கால்பந்து வீரரும் ஒருவர். அவர் 15 ஆண்டுகளுக்கு முன்பு சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையே நடைபெற்ற முதலாவது சர்வதேச கால்பந்துப் போட்டியில் பங்கெடுத்தார்.

"இந்திய கால்பந்து ஆட்டத்தின் தரம் இன்று கணிசமாக அதிகரித்துள்ளது" என்று அவர் கூறினுர்.

இந்திய ஆட்டக்காரர்களின் தரம் அதிகரித்துள்ளது என்பதைச் சோவியத் விளையாட்டு வீரர்களும், ரசிகர்களும் ஒருமுகமாக ஒப்புக்கொள்ளுகின்றனர்.

"இங்குள்ள பருவநிலையும், மைதானமும் அவர்களுக்குப் பழகி விட்டால், அவர்கள் மிகச்சிறப்பாக ஆடுவார்கள் என்பதில் ஐயமில்லை" என்று "சோவியத் இண்டர் நேஷனல்" என்ற ஸ்தாபனத்தின் நிர்வாகியான வாலந்தினு நிக்கொலோய் கூறினுர்.

இந்தியக் கால்பந்துவீரர்கள் திபிசிலியிலும், பாகூலிலும், லெனின் கிராடிலும் விளையாடுவார்கள்.

### சோவியத் வீரர்களிடம் எவ்வாறு கற்கவேண்டும்?

"சோவியத் கால்பந்து வீரர்கள் மிகவும் திறமைசாலிகள். அவர்களிடருந்து நாங்கள் எவ்வளவோ கற்றுக் கொள்ளவேண்டும். சோவியத் குழுக்களுடன் விளையாடுவதால் எங்கள் திறமை மேலும் வளரும் என்பதில் ஐயமில்லை." என்று பாட்சா என்ற இந்தியக் கால்பந்துவீரர் கூறினுர்.

அண்மையில் மாஸ்கோவில் சோவியத் யூனியனுக்கு இந்தியாவுக்கும் இடையே ஒரு காலாசார, விஞ்ஞான ஒத்துழைப்பு ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. இதில் விளையாட்டுகளுக்கு முக்கிய இடம் அளிக்கப்பட்டுள்ளது. வருங்காலத்தில் இந்திய விளையாட்டு வீரர்களின் ஆட்டங்களைக் கண்டு களிக்கச் சோவியத் ரசிகர்கள் மிகுந்த ஆவலோடு உள்ளனர்.

—ஏ.பி.என்

# கண்ணோட்டம்

## தொழிற்சங்கங்கள் மீது அமைச்சர் பாய்ச்சல்

"ஆசியாவிலுள்ள பல தொழிற்சங்கங்கள் இன்னும் கோரிக்கை அடிப்படையில் இயங்குகின்றனவே தவிர அபிவிருத்தி அடிப்படையில் செயல்படத் தொடங்கவில்லை' என்று இந்திய அரசின் தொழிலாளர் நல அமைச்சர் ஆர். கே. கடில்கர் அறிவித்துள்ளார்.

—தினமணி (28—9-71)

"இந்தியாவில் தொழிலாளர் சங்கங்கள் அரசியல் ரீதியில் இயங்குகின்றன. அரசுக்கு உள்ள எதிர்ப்பு தொழிற்சங்கங்களிலும் பரவுகிறது. இதனால் அரசுக்கு பல சங்கடங்கள் ஏற்பட்டாலும் தொழிற்சங்க இயக்கம் பாதுகாக்கப்படவேண்டுமென்றே அரசு நம்புகிறது" என்றும் தென் கொரியத் தலைநகரான சியோலில் நடைபெற்ற ஆசிய நாட்டு தொழிலாளர் நல அமைச்சர்கள் மாநாட்டில் அவர் மேலும் கூறியுள்ளார்.

இந்திய நாட்டில் தொழிலாளி வர்க்கத்தின் வாழ்க்கைத்தரம் குறைந்துகொண்டே போகிறது. அதே சமயத்தில் ஏகபோகவாதிகள் கொழுத்துக்கொண்டே போகிறார்கள்.

உதாரணமாக இந்தியப் பெருமுதலாளிகளில் ஒருவரான டாட்டாவின் சொத்து மதிப்பு 1963 - 64 ல் ரூ. 102 கோடியே 31 லட்சமாக இருந்தது 1967-68 ல் ரூ. 584 கோடியே 63 லட்சமாக உயர்ந்துள்ளது.

இதே காலகட்டத்தில் பிர்லாவின் சொத்து மதிப்பு ரூ. 76 கோடியே 34 லட்சத்திலிருந்து ரூ. 475 கோடியே 60 லட்சமாக உயர்ந்துள்ளது.

இவ்வாறாக இந்தியப் பொருளாதாரத்தை ஆட்டிப் படைத்துக்கொண்டிருக்கும் 75 ஏகபோக முதலாளிகளின் சொத்து மதிப்பு இந்த காலகட்டத்தில் ரூ 646 கோடியே 50 லட்சத்திலிருந்து ரூ. 4,032 கோடியே 45 லட்சமாக உயர்ந்துள்ளது.

அதே சமயத்தில் தொழிலாளர்களின் உண்மை வருமானம் 1939-ல் 106-5 புள்ளியிலிருந்து 1955-ல் 96 4 புள்ளியாகக் குறைந்திருப்பதாக அரசாங்கப் புள்ளி விவரம் கூறுகிறது.

இந்திய நாட்டின் உழைக்கும் மக்கள் உற்பத்தியைப் பெருக்கும்போது கிடைக்கும் பலன் என்ன?

இந்திய அரசாங்கம் நடத்திய சர்வேயின்படி 1959ம் ஆண்டில் உற்பத்தி மதிப்பு ரூ. 2691 கோடியிலிருந்து 1966-ல் ரூ 7213 கோடியாக உயர்ந்திருக்கிறது 168 சதவிகிதமாக உயர்ந்திருக்கிறது. வேலைவாய்ப்புகளோ 2870 ஆயிரத்திலிருந்து 3934 ஆயிரமாகத்தான் உயர்ந்திருக்கிறது. 37 சதவிகிதமாகத்தான் உயர்ந்திருக்கிறது. வேலைப்பளு உயர்ந்திருப்பதைத்தான் இது காட்டுகிறது.

அரசாங்கத்தின் புள்ளி விவரப்படி நபர் ஒன்றுக்கு உற்பத்தி அதிகரிப்பு 95 சத விகிதமாக உயர்ந்திருக்கிறது. அதேசமயம் ஊதியமோ 64 சத விகிதம்தான் உயர்ந்திருக்கிறது உற்பத்தி அதிகரிப்பில் ஊதிய அதிகரிப்பு 3-2 சதவிகிதம் குறைந்திருக்கும்போது லாபமாகக் கிடைக்கும் உபரி மதிப்பு 3·2 சதவிகிதம் கூடியுள்ளது.

இவ்விதம் தொழிலாளர்கள் வஞ்சிக்கப்பட்டிருக்கும் போதுதான் ஆசிய தொழிலாளர் அமைச்சர்கள் மாநாட்டில் கோரிக்கை அடிப்படையில் தொழிற்சங்கங்கள் இயங்கக்கூடாது என்று இந்திய தொழிலாளர் அமைச்சர் உபதேசம் செய்துள்ளார்.

தற்போது இந்திய நாட்டில் பொருளாதார நெருக்கடி முற்றிவரும்போது காண்பதென்ன? முதலாளிகள் தங்களுடைய லாபத்தைக் கொஞ்சமும் குறைத்துக் கொள்ளத் தயாராகயில்லை. ஆட் குறைப்புச் செய்யவும் வேலைப்பளுவை ஏற்றவும் தொழிற்சாலைகளை மூடுகிறார்கள். இந்த நிலைமையைத் தடுப்பதற்கு இந்திய அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கை என்ன?

சியோல் நகரில் மாநாட்டில் கடில்கர் பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில் தான் குறைந்தபட்ச போனஸ் வரம்பைக்கூட உயர்த்தச் சம்மதிக்க மாட்டோம் என்று முதலாளிகள் பத்திரிகைகளில் அறிக்கை விடுத்துள்ளனர்.

இந்தியாபோன்ற ஒரு முதலாளித்துவ நாட்டில் கோரிக்கை அடிப்படையில் தான் தொழிற்சங்கங்கள் இயங்கமுடியும்.

சோஷலிஸ்ட் நாட்டில்தான் கோரிக்கை அடிப்படையில் இயங்காமல் அபிவிருத்தி அடிப்படையில் தொழிற்சங்கங்கள் இயங்க முடியும். சோஷலிச பொருளாதாரத்தில் தொழிலாளர்களின் உற்பத்தி அதிகரித்தால் அதனால் சமூகத்துக்கே நன்மை ஏற்படும். இந்திய நாட்டில் உற்பத்தி அதிகரித்தால் அதன் பலன் தனிப்பட்ட முதலாளிகளுக்குத்தான் கிடைக்கிறது, சமூகத்துக்கு கிட்டவில்லை.

இந்திய நாட்டில் தொடர்ந்தால் போல் மூன்று ஆண்டுகள் உணவு உற்பத்தி அதிகரித்தபோதிலும் நபர் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு கிடைக்கும் தானிய அளவு 1965-ல் 16·79 அவுன்சிலிருந்து 1970-ல் 15 71 அவுன்சாகக் குறைந்திருக்கிறது. தேசிய வருமான அதிகரிப்பு விகிதம் அதிகரித்தாலும் தனி நபர் வருமான அதிகரிப்பு விகிதம் முதலாவது திட்டகாலத்தில் 1 6 சத விகிதத்திலிருந்து மூன்றுவது திட்டகாலத்தில் 0 6 சதவிகிதமாகக் குறைந்துள்ளது.

இந்த நிலையில் இந்திய இளைஞர்கள் எந்த அளவு உடல் வலுவற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதை மேற்கு வங்கத்தில் பிரதேச சேனைக்கு மனுச் செய்பவர்களில் 70 சதவிகிதம் மனுக்கள் நிராகரிக்கப்படுவதே எடுத்துக் காட்டுகிறது.

இந்த நிலைமையில்தான் கோரிக்கை அடிப்படையில் தொழிற் சங்கங்களா என்று அமைச்சர் கடில்கர் கேள்வி எழுப்புகிறார்.

தொழிற்சங்கங்களில் அரசியல் பரவுவதை அரசு சகித்துக் கொள்ளுவதாக சியோல் நகரில் கடில்கர் பேசினாலும் துர்க்காப்பூர் நகரில் 60 ஆயிரம் தொழிலாளர்களை நசுக்க 30 ஆயிரம் பேர் கொண்ட ஆயுதம் தரித்த போலீஸ் படையை அனுப்பி வைத்த நிகழ்ச்சி எந்த அளவு சகிப்புத் தன்மையைக் காட்ட இந்திய அரசு தயாராக இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுகிறது.

ஆ. ச.

## வீட்டு வரி உயர்வை எதிர்த்து மேலூரில் கடையடைப்பு!

### அனைத்துக் கட்சித் தலைவர்கள் கண்டனம்

மேலூர், செப். 29—

வரியைக் குறைப்போம், வசதியைப் பெருக்குவோம் என்று வாக்குகளை வாங்கிச் சென்ற தி. மு. க. வினர் — மேலூர் பஞ்சாயத்தைக் கைப்பற்றியவுடன், வீட்டு வரியைத் திடீரென்று 10 சதம் முதல் 15 சதம் வரை — சில இடங்களில் ரூபாய்க்கு 50 பைசாவரையும் கூட-உயர்த்தி விட்டார்கள்.

ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு தடவை வரி மாறுதல் செய்யும் நடைமுறையை மாற்றி விட்டு — இடையிலேயே வரியை உயர்த்தி விட்டார்கள்.

அடாத வரி உயர்வைக் கண்டு மேலூர் மக்கள் கொந்தளிக்கவே, அவர்கள் சார்பில் மகஜர் கொடுத்துப் பேச சர்வ கட்சித் தலைவர்களும் வர்த்தக சங்க வரி கொடுப்போர் பிரதிநிதிகளும் பஞ்சாயத்து தலைவரைச்சந்திக்கச் சென்றார்கள். கூப்பிட்ட குரலுக்கு எங்கள் தலைவர் ஓடோடி வருவார் என்று தேர்தல் சமயத்தில் அலங்காரமாகப் பேசியவர்கள், இத்தனை பிரதிநிதிகள் சென்று பலமுறை முயன்றும், இன்று, நாளை என்று திருப்பி அனுப்பி விட்டாரே தவிர, சந்திக்கவே இல்லை.

#### கடையடைப்பு

வரி உயர்வு அக்கிரமத்தையும், பஞ்சாயத்தலைவரின் ஆணவப்போக்கையும் கண்டிக்க, 21—9-71-ல் பூரண கடையடைப்பும் கண்டனப் பொதுக் கூட்டமும் நடைபெற்றன

தி மு க. தவிர, இதர எல்லா கட்சிகளும் இதில் பங்கு கொண்டன! கடையை அடைக்கச் சொல்லி. சர்வ கட்சியினருடன் வந்து கொண்டிருந்த பார்வர்டு பிளாக்கட்சியைச் சார்ந்த நபரை, வழியில் தி.மு.க. வினர் இடைமறித்து, ஏதோ சொல்லிக் கலைத்து ஒதுக்கிகூட்டிக்கொண்டுபோய் விட்டார்கள்.

#### கண்டனக் கூட்டம்

வீட்டுவரி உயர்வு எதிர்ப்புக் குழு சார்பில் திரு. டி.வி. ராமசாமி (சுதந்) தலைமையில் கண்டனப்பொதுக்கூட்டம் நடைபெற்றது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தோழர்கள் வி. குருசாமி, கே குமார், இ,முஸ்தபா மற்றும் திரு. ஆ அடைக்கலம் (வலது கம்யூ). திரு ராஜு (தமிழரசு) திருவாளர்கள் நா. வெங்கடாசலம், வயிசண்முகம், சுப. காஞ்சிவனம் (ஸ்.காங்கிரஸ்) பி.சேக்மைதீன் (முஸ்லீம் லீக்) ஆகியோர் பேசினர்.

## பஸ் கட்டண உயர்வை எதிர்த்து போராடுவோம்

### பி. ஆர். பரமேஸ்வரன் அறிவிப்பு

சென்னை, செப். 29—

தமிழக அரசு பஸ் போக்குவரத்துத் துறை செய்யவிருக்கும் பஸ்கட்டண மாறுதலால் சாதாரண ஏழை மக்களும் தொழிலாளிகளுமே பாதிக்கப்படுவார்கள். எனவே இதனை எதிர்த்து இயக்கம் நடத்தப்படும் என்று சென்னை மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் பி. ஆர். பரமேஸ்வரன் கூறினர். அவர் மேலும் கூறியதாவது:—

சென்னை நகர எல்லைக்குள் ஓடும் பஸ்களுக்கு முதல் கட்டண(ஸ்டேஜ்)நிலை 10 காசு ஆகவும், அடுத்து வரும் ஒவ்வொரு கட்டண நிலைக்கும் 5 காசு ஆகவும், பயணக்கட்டணம் இருக்கும் என்று தமிழக அரசு பஸ்போக்குவரத்துத் துறை அறிவித்திருக்கிறது. உண்மையில், சீரமைப்பு என்ற பெயரால் 10 காசு, 15 காசு டிக்கெட்டுகளுக்கு அப்பால் 5 காசு கட்டண உயர்வு செய்யப்பட்டிருக்கிறது.

#### மாதம் ஒருபாய் அதிகரிப்பு!

பெரும்பாலும் பஸ்களில் பயணம் செய்பவர்கள் ஏழைகள், தொழிலாளர்கள் தான் 10 காசு, 15 காசு கட்டண தூரத்திற்குச் செல்லும் தொழிலாளர்கள் பெரும்பாலும் நடந்தே சென்று விடுகிறார்கள். 20 காசுக் கட்டணத்திற்குமேல் உள்ள தூரங்களுக்குச் செல்லும் தொழிலாளர்கள் தான் பஸ்ஸில் செல்கின்றனர். இனி 20 காசு கட்டணம் செலுத்தியவர்கள் 25 காசாகவும், 25 காசு கட்டணம் செலுத்தியவர்கள் 30 காசாகவும் கட்டணம் செலுத்த வேண்டியிருக்கும். இதனால் ஏழைகளும் தொழிலாளர்களும் மாதம் 3 ரூபாய் அதிகக்கட்டணம் செலுத்த வேண்டியிருக்கும்.

#### எதிர்த்து இயக்கம்

இந்தக் கட்டண உயர்வை எதிர்த்து இயக்கம் நடத்துவது என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முடிவு செய்து இருக்கிறது இந்த இயக்கம் எந்த வடிவத்தில் இருக்கும் என்பதை விரைவில் முடிவு செய்வோம்.

இவ்வாறு சென்னை மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் பி. ஆர். பரமேசுவரன் கூறினர்,

## சென்னை எவரெஸ்ட் ஓட்டல் தொழிலாளர் போராட்டம் வெற்றி!

சென்னை, செப். 29—

சென்னை பூந்தமல்லி ஹைரோடில் உள்ள எவரெஸ்ட் ஓட்டலில் பணியாற்றும் தொழிலாளர்களின் கோரிக்கைகளான சம்பள உயர்வு பஞ்சப்படி ஆகியவைகளுக்காக தொழிலாளர்கள் போராட்டத்தில் இறங்கினர்.

கடந்த மே 30-ம் தேதி நிர்வாகத்திற்கு தொழிலாளர்களின் கோரிக்கைகளை அனுப்பியும் எவ்வித முடிவும் ஏற்படாததால் தொழிலாளர்கள் சங்கத்தின் மூலம் வேலை நிறுத்தம் செய்ய நோட்டீஸ் கொடுத்து, ஸ்தாபனத்தின் முன்பு ஆர்ப்பாட்டம் செய்து வந்தனர். தொழிலாளர்களின் ஒன்றுபட்ட போராட்டத்தினால், நிர்வாகம், ஏற்கனவே ஓட்டலை மூடப்போவதாக அறிவித்திருந்து, அந்த நிலை மாறி, செப் 22-ல் லேபர் அதிகாரி முன் நமது சங்கத்துடன் ஒப்பந்தம் செய்தனர். ஒப்பந்தப்படி தொழிலாளர்களுக்கு செப் 1 முதல் தற்போது கிடைக்கும் சம்பளத்துடன் ரூ. 20/- அளிக்கப்படும். அதில் அதில் ரூ 5- சம்பளத்துடனும் ரூ. 15 பஞ்சப்படியுடனும் உயர்த்தப்படும்.

ஒவ்வொரு தொழிலாளியும் நாள் ஒன்றுக்கு, விற்பனை மதிப்பின் அடிப்படையில் ரூ 3- க்கு உணவு உட்கொள்ளலாம். ஆனல் விற்பனை மதிப்பின் பகுதிதொகை தொழிலாளர்கள் 50 சதவிகிதம் வழங்கினுல் போதும். அதுதான் பொருளின் உண்மையான மதிப்பாகும் என்று முடிவு செய்துள்ளனர்.

இதிலிருந்து, ஓட்டல் முதலாளிகள் விற்பனை பொருளின் 50 சதவிகித லாபத்தை பெறுகின்றனர் என்பதை மறைமுகமாக ஒத்து கொண்டுள்ளனர்.

#### சி. ஐ. டி. யூ. ஒப்பந்தம் தி. மு. க. ஒப்பந்தமும்

ஓட்டல் தொழிலின் வரலாற்றிலே இவ்வாறு ஓர் ஒப்பந்தம் நடைபெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

தி. மு. க. பேரவை தொழிலாளர்களை பழிவாங்க ஒத்துக்கொண்டு 3 வருட காலம் எந்த நடவடிக்கைகளிலும் ஈடுபடுவதில்லை என முன்னாள் அமைச்சர் திரு வேழவேந்தன் உட்லன்ஸ் ஓட்டல் நிர்வாகத்துடன் ஒப்பந்தம் செய்துள்ள போது, சி. ஐ. டி. யூ. சங்கம் மேற்கண்ட ஒப்பந்தம் செய்துள்ளது என்பதும் குறிப்பிடத் தக்கது.

மேற்கண்ட ஒப்பந்தம் 31-3-72 முடிய அமுலில் இருக்கும்.

## லட்சுமி மெஷின்ஒர்க்ஸ் தொழிற்சாலையில் வலதுகம்யூனிஸ்ட் துரோகம்!

கோவை, செப்- 29

கோவை பெரியநாயக்கன் பாளையத்திலிருக்கும் லட்சுமி மெஷின் ஒர்க்ஸ் தொழிற்சாலையில் ஐ என். டி. யூ. சி. சங்கமும் தி. மு, க. (காட்டூர் கோபால்) சங்கமும் சேர்ந்து 1970 - 71 ஆண்டுப் போனஸ் பிரச்சனையில் 8 1/3 சதம் என ஒப்புக் கொண்டு உடன்பாடு செய்து கொண்டன.

இந்த உடன்பாடு தவறானது என்றும், அதிகப்படியாக லாபமிருக்கிறது என்றும், வலது கம்யூனிஸ்டுகளும், தி. மு. க. சங்கமும் எதிர்த்து, தொழிலாளர்களை இந்தபோனஸ் வாங்க கூடாது என்றும், அதிகப்படியான போனஸ் வாங்க முடியுமென்றும் அந்த ஒப்பந்தத்தை எதிர்த்து தீவிரமாகப் பிரச்சாரம் செய்தார்கள்.

ஆனல், சிலநாட்கள் கழித்து வலது கம்யூனிஸ்டுகள் மேற்படி 8. 1/3 சதம் போனஸை வாங்குங்கள் என்று முடிவு எடுத்து கூறிவிட்டார்கள்- போனஸ் பிரச்சனைக்காக ஐ. என். டி. யூ. சி. தி. மு. க. ஒப்பந்தங்களை எதிர்த்து நின்ற தொழிலாளர்களை காலை வாரி விட்டு துரோகம் செய்தனர்!

— ந நி

## லெனின் மன்ற திறப்புவிழா

நெல்லிக்குப்பம், செப். 29—

நெல்லிக்குப்பத்திலுள்ள இளைஞர்கள், மாணவர்களை உறுப்பினர்களாகக்கொண்ட லெனின் மன்றத்தை தோழர் சி கோவிந்தராஜன் திறந்து வைத்தார். கட்சிக் கொடியை தோழர் வி. பி. சிந்தன் ஏற்றி வைத்தார்.

அதையொட்டி நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் வி.பி.சிந்தன், கே. ரமணி, சி.கோவிந்தராஜன் ஆகியோர் லெனின் வகுத்த கொள்கைகளைப் பற்றியும் இன்றைய அரசியல் நிலைமைகளையும் தெளிவாக விளக்கிப் பேசினார்கள்.

இரவு தஞ்சை இடும்பையன் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றது.

## நெல்லிக்குப்பத்தில் சி. ஐ. டி. யூ. தலைவர்களுக்கு வரவேற்பு!

நெல்லிக்குப்பம் செப். 29—

நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை தொழிலாளர் சங்கத்திற்கு சி. ஐ. டி. யூ. தலைவர்கள் வந்தபோது செப் 24-ல் வரவேற்புப் பொதுக்கூட்டம் சங்கத்திடலில் நடைபெற்றது. மாலையில் போனஸ் கோரிக்கையை வலியுறுத்தியும், ஆலை வாட்சுமென்களைப் பழிவாங்கியதை எதிர்த்தும் கோஷங்கள் முழங்கிங்கொண்டு மாபெரும் ஊர்வலம் ஒன்று புறப்பட்டு நகரைச் சுற்றி சங்கத்திடலுக்கு வந்தது

பொதுக்கூட்டத்தில் தோழர்கள் வி. பி. சிந்தன், ஆர். உமாநாத், கே. ரமணி முதலியவர்களுக்கு டிபார்ட்மென்ட் வாரியாக மலர் மாலைகள், கைத்தறி ஆடைகள் அணிவித்து தொழிலாளர்கள் வரவேற்றனர். சங்கத் தலைவர் தோழர் சி. கோவிந்தராஜனும், இதர நிர்வாகிகளான தோழர்கள் கே. வீரப்பன், டி. குப்புசாமி, ஆர். பஞ்சாட்சரம் ஆகியோர் போனஸ் கோரிக்கையை வலியுறுத்திப் பேசினர்.

## பரமக்குடியில் அர்த்தால்!

பரமக்குடி, செப் 29—

பரமக்குடியில் கைநெசவுத் தொழிலாளர்களின் 8 அம்சக் கோரிக்கைகளானதீபாவளிக்கு 10சதம்போனஸ், 25சதம் கூலி உயர்வு கோரியும், கரைபட்டு பசை போட்டுத்தர கோரியும், முந்திக் கூலி வேண்டும் பேட்டு மாற்றக் கூலிதரக் கோரியும், சிக்கனச் சேமிப்புத் திட்டம் வேண்டுமென்றும், சட்டப் பாதுகாப்பு வேண்டுமெனவும் வலியுறுத்தி செப். 27ந் தேதி ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. பரமக்குடி—எமனேஸ்வரம் அனைத்து நெசவுத் தொழிலாளர் சங்கங்களின் கூட்டமைப்பு விடுத்த வேண்டுகோளின்படி இந்த அர்த்தால் நடைபெற்றது. அன்று காலையிலிருந்து பரமக்குடி—எமனேஸ்வரம் பகுதிகளில் தெருக்களில் பாவுகள் நீட்டப்படவில்லை. நெசவுகளில் யாரும் போகவில்லை. எங்களுடைய கோரிக்கைக்காக நாங்கள் போராடுவதற்குத் தயார்" என்று கூறும் வண்ணம் பரமக்குடி எமனேஸ்வரம் நெசவாளர் பகுதி இருந்தது.

மாலை 3-மணிக்கு எமனை நேருஜி மைதானத்தில் சாரை சாரையாக நெசவாளர்கள் வந்து சேர்ந்தனர்.

நெசவாளர்களுக்குப் 10சதவீதம்போனஸ்வேண்டும்

கூலி உயர்வு 25 சதவீதம் வேண்டும்.

சட்டப்பாதுகாப்புவேண்டும்

போன்ற கோஷங்கள் வானை பிளந்தன.

திரு. வி. எம். ராமாச்சாரி தலைமையில்பிரம்மாண்டமான ஊர்வலம் துவங்கியது. நகரின் முக்கிய பகுதிகள் வழியாக தாசில்தார் ஆபீஸ் சென்று, தாலுகா தாசில்தாரிடம் குழுவின் பிரதிநிதிகளுடன் சென்று குழுச் செயலாளர் தோழர். பி. எஸ். துளசிராமன் கோரிக்கை மனுவை சமர்ப்பித்தார். தாசில்தார் 30 ஆம் தேதி பேச்சுவார்த்தையில் சுமுகமாக முடிவு செய்ய ஆவன செய்வதாக கூறினர்

பிறகு நீ. சி. இராஜாராம், (தி. மு. க) தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பி. எஸ். துளசிராமன் (மார்க்சிஸ்ட்) வி. ஜீ. அய்யாண் (மார்க்சிஸ்ட்) வி. எம். ராமாச்சாரி, (இண்டிகேட்) எஸ். ஜே. நாகசாமி, அ. நா. ஹரி கோவிந்தன் (சோசலிஸ்ட்) வி. ஆர். ராமலிங்கம் (ஜனசங்கம்) ஆகியோர்பேசினார்கள்.

8 கோரிக்கைகள் பொறிக்கப்பட்ட பேட்ஜ்கள் 0-50 காசு வீதம் விற்பனை செய்யப்பட்டன.

இதற்கு முன்பு 23—9—71 முதல் 26—9—71 வரை ஏரியா பொதுக் கூட்டங்கள் நடத்தப்பட்டுள்ளன-

## கயத்தாறில் மின்சார ஊழியர்கள் கண்டன ஆர்ப்பாட்டம்!

கயத்தாறு, செப். 29—

கயத்தாறில் செப். 25-ம் தேதி மாலை 5 மணிக்கு தமிழ்நாடு மின்சார ஊழியர்கள் சங்கத்தின் சார்பில் கண்டன ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றன.

மின்சார மேற்பார்வையாளர் அலுவலகம் முன்பிருந்து ஊர்வலம் புறப்பட்டு உணர்ச்சிமிக்க கோஷங்களை எழுப்பிக்கொண்டு லெனின் திடலை வந்தடைந்தது. அதிகபட்ச போனஸ் கோரியும், சி எல். ஆர். நிரந்தரம், வாரிசுக்கு வேலை ஆகியவற்றை வலியுறுத்தி இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

தோழர் ராமமூர்த்தியின் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் எஸ். பாலவிநாயகம், பீ. சி வேலாயுதம், எஸ். கே. பழனிச்சாமி, சேதுக் கோனார், புகழும் பெருமாள், தண்டபாணி, வாசுதேவன், கோபால். வீரப்பன், சுப்பையா ஆகியோர் பேசினர்.

## முகவூரில் பொதுக்கூட்டம்

முகவூர், செப்: 29—

சேத்தூர், முகவூர், செட்டியார்பட்டி கட்சிக கிளைகளின் சார்பில் தோழர் எம். தங்கச்சாமி தலைமையில் ஊர்வலம் சேத்தூரிலிருந்து புறப்பட்டது. தளவாய்புரம், கொமந்தாபுரம் வழியில் முகவூர் வந்து சேர்ந்தது.

அங்கு இரவு 7 மணிக்கு தோழர் ச சந்தனம் தலைமையில் பொதுககூட்டம் நடைபெற்றது. தோழர்கள் சீ. நம்மாழ்வார், ஆ. உலகநாதன், எம். தங்கச்சாமி ஆகியோர் பேசினர்.

## வலது கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. சுப்பு ஒரு நக்சல்பாரி!

### தி. மு. கழக தலைவர் ஒருவர் பேசியது

"வலது கம்யூனிஸ்டு எம். எல். ஏ. சுப்புவைக்குறிப்பிட்டு நான் பேசுவதே கிடையாது. அவர் வெற்றி பெற்றபின் நம்மை தூற்றுகிறார். அவர்கள் தலைவர்களான கல்யாணசுந்தரமும், கே. டி. கே.யும் உங்களைப் பற்றி நாங்கள் பேசமாட்டோம், நீங்களும் எங்களைப் பற்றி பேசாதீர்கள்; அவர் சிறு பையன், நீங்களோ மாவட்டச் செயலாளர் என்றார்கள் நான் அவர்களைப் பற்றிப் பேசக்கூடாது என்று ஒரு மாதமாக பேசுவதே இல்லை. பின்னர் வத்திராயிருப்பு விழாவிற்கு அமைச்சர் வரவேண்டும் என்றார். நான் அமைச்சர் ராஜாராமை அழைத்து வந்தேன். அப்போதெல்லாம் ஒழுங்காகத்தான் இருந்தார், இந்த சுப்பு. பின் பல கூட்டங்களில் தி. மு. க. வை ஒரு மாதிரியாகப் பேசினர். அதற்குப் பதில் அளித்து நான் தேவகோட்டையில் பேசினேன்."

"......சுப்பு எம். எல். ஏ., கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர் அல்ல; அவர் நக்சல்பாரி. இதற்கு என்னிடம் ஏராளமான ஆதாரம் உள்ளது. சட்ட விரோதமாகப் பேசுவது, சட்டத்தைக் குலைப்பது— இதுதான் தலைசிறந்த நக்சல்பாரி வேலை."

"......கம்யூனிஸ்டுகளின் கொள்கையே தாக்குவது, அடிப்படை சட்டத்தைக் குலைப்பதுதான். ராஜபாளையத்தில் தி. மு. க. தோழர்களைத் தாக்கினுல் நாங்கள் சகித்துக்கொள்ள மாட்டோம். நாங்கள் போலீஸ் பாதுகாப்பை நம்பியவர்கள் அல்ல; எங்களைப் பாதுகாத்துக் கொள்ள நாங்களும் எதிர் நடவடிக்கை எடுக்கவேண்டும் என எச்சரித்துக்கொள்கிறேன்."

—ராஜபாளையத்தில் நடைபெற்ற அண்ணாதுரை பிறந்த தின விழாவில் தி. மு. க. எம். எல். சி. யான எஸ். எஸ். தென்னரசு பேசியது.

(தினமலர் 29—9—71)

0 0 0

## கருணாநிதிக்கு எல்லாருமே நக்சல்பாரிகளாகத் தெரிகிறார்கள்!

### எம். கல்யாணசுந்தரம் பேச்சு!

"போலீசை வைத்து கட்சியை வளர்க்க (தி. மு. க.) நினைக்கிறார்கள். போலீசை நம்பி எந்த கட்சியும் வளராது."

ஆனல் இன்று பிரச்சினைகளை சமாளிக்க முடியாமல் 40 வயதிலேயே பிளட் பிரஷர் வந்து ஆஸ்பத்திரிக்குப் போய்விடுகிறார்கள். நாங்கள் தி மு. க. வுடன் சேர்ந்து ஜால்ரா போட அல்ல; தார்க்குச்சி போட."

"...... கருணாநிதிக்கு, இப்பொழுது எல்லோரும் நக்சல்பாரிகளாகவே தெரிகிறார்கள்."

மதுரை முத்து, தென்னரசு போன்றவர்கள் கல்யாணசுந்தரத்தையும், கே. டி. கே. தங்கமணியையும் பற்றி பேசிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய சொல் அம்பு வேல் போன்ற எது வந்தாலும் அது எங்கள் காலடியில் மலராக வந்து விழும்."

— ஆலங்குடியில் செப் 27-ல் நடந்த வலது கம்யூனிஸ்ட் பொதுக்கூட்டத்தில் பேசிய எம். கல்யாணசுந்தரம் எம். பி பேச்சின் சில பகுதிகள் (தினமலர், 29—9—71)

0 0 0

## கருணாநிதி கூட்டணியின் எஜமானரா?

### எம். கல்யாணசுந்தரம் கேள்வி!

"கூட்டணியில் இருப்பவர்கள் இருக்கலாம்; போகிறவர்கள் போகலாம். என்று கூட்டணியின் எஜமானர்கள் போன்று (கருணாநிதி) பேசுவதற்கு என்ன எழுந்தது? முற்போக்கு கூட்டணிக்கு எஜமான் கிடையாது. மக்கள் தான் எஜமான்கள்."

'நாடு தழுவிய முறையில் இந்திரா காங்கிரசின் அரசியல் செல்வாக்கும் கம்யூனிஸ்ட் கட்சியின் தத்துவார்த்த செல்வாக்கும் முற்போக்கு கூட்டணியையும் சேர்ந்ததுதான்."

"அரசு அதிகாரத்தை மட்டும் பயன்படுத்தி எந்த அரசியல் கட்சியும் வளர்ந்துவிட முடியாது; நிர்வாக இயந்திரத்தைக்கொண்டு எந்தக்கட்சியையும் ஒடுக்கிவிட முடியாது.

(தினமலர் 29—9—71)

இவை—

"கூட்டணியிலிருந்து தோழமை கட்சிகளை நாங்களாக போகச்சொல்ல மாட்டோம்; அப்படிப் போனுல் கவலைப் படமாட்டோம்" என்று முதலமைச்சர் கருணாநிதி வெளியிட்ட கருத்துக்கு, வலது கம்யூனிஸ்டு தலைவர் எம். கல்யாணசுந்தரம் கூறியுள்ள பதில்.

## பவானி காடையம்பட்டியில் போலீஸ் வெறியாட்டம்

பவானி, செப். 29—

பவானி காடையம்பட்டியில், வலதுகம்யூனிஸ்ட்கட்சியைச் சார்ந்தவர்களுக்கும், தி. மு. க. வைச் சார்ந்தவர்களுக்கும் முன் விரோதத்தின் காரணமாக செப். 27-ம் தேதி காலையில் அடிதடி நடந்து, சிலர் வெட்டுக் காயங்களுடன் ஈரோடு மருத்துவமனையில் சிகிச்சைபெற்று வருகிறார்கள். இந்த நிலையில், போலீஸார் அடி தடி ரகளைக்கு பொறுப்பானவர்களைக் கைது செய்யவில்லை.

அதற்குப் பதிலாக, சம்பந்தப்படாதவர்களையும், ரோட்டில் நடமாடும் பெண்களையும் வயதான பெரியவர்களையும், விவசாயிகளையும், தொழிலாளிகளையும் போலீசார் கடுமையாகத் தாக்குகின்றனர். சம்மந்தப் படாதவர்களையெல்லாம் வீடு புகுந்து கைது செய்வதும், நையப்புடைத்துவிடுவதும் நடத்துவருவதைப் பார்த்த பலர் பயந்து ஊரைவிட்டே ஓடிப் போய்விட்டார்கள்.

போலீசார், வழக்குகளுக்கு சம்பந்தமில்லாத அப்பாவி மக்களை வீடுபுகுந்து கைது செய்வதையும், கண்டபடி தாக்குவதையும் உடனடியாக நிறுத்தக்கோரி தமிழக விவசாயிகள் சங்க கோவை மாவட்டக் குழுவின் துணைத் தலைவர் கே. எம். காளியண்ணன் அறிக்கை விடுத்துள்ளார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 மூதல்சந்து வடக்கு சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.